உ

# அருட்செல்வம்



(நமது வேதம்)

யோகி ஸ்ரீ. சுத்தானந்தபாரதியார்







புதுயுக நிலையம்
புதுச்சேரி

# பொருளடக்கம்

# நம் அருட்செல்வம்

எண்ணெயும் திரியும் உள்ளன—இருளைப் போக்குமா ? இருளைப் போக்க ஒளி வேண்டும். திரியில் சுடர் விளங்க வேண்டும். ரேடியோப் பெட்டி உள்ளது ; விசையை அமுக்குகிறோம். மின்சாரம் இல்லை ; பாட்டுக் கேட்குமா ? ரேடியோ ஓடுவதற்கு மின்சக்தி வேண்டும். நமக்கு உடல், பலம், பணம் காசு உள்ளன ; எனினும் மனம் அமைதியாவ தில்லை. விளக்கிற்கு ஒளி, ரேடியோவுக்கு மின்சக்திபோல் வாழ்விற்கு **அருட்செல்வம்** வேண்டும். பொருட் செல்வம் எத்தனை யிருந்தாலும் உள்ளின்பம் தராது. அருட்செல்வமே இன்பமாகும். செல்வத்துட் செல்வம் அருட்செல்வம். உலக வாழ்விற்குப் பொருள் உடல், அருள் உயிர் போன்றது. பொருளின்றி உடலின்பமில்லை. அருளின்றி உள் ளின்பமில்லை. ஆடை உணவு இருக்கை ஊர்மதிப்பு, கல்வி தொழில் செல்வம் எல்லாம் பொருளால் வரும். அன்பு கருணை ஈகை, ஒப்புரவு, அமைதி, அறிவு, கலை, சுதந்தரம், ஆத்மசுத்தி, சமத்துவம், சன் மார்க்க ஒற்றுமை, கடவுளுணர்ச்சி இவையெல்லாம் அருளால் வரும். அருளுடையார் எல்லாம் உடையார். பொருள்மட்டும் கொண்டவரிடம் தன்னலம் போட்டிபொருமைகள் இருக்கும். உலக வல்லரசுகளிடம் பொருளாட்சி யுள்ளது. ஆனால் அதன் பின்னே அணுவெடிகளும், கதிர்வெடிகளும், நோய் வெடிகளும் படபடத்துப் போர்ப்பேயைக் கிளப்பிவிடுகின்றன. பொருளாட்சியும் ஸயன்ஸ் மூளையும் உலகிற்குச் சமாதானம் தரவில்லை. அருள் என்கிற அமரசஞ்சீவியை இந்நாடுகள் நெஞ்சில் வளர்த்தால், பேராசை ஒழியும் ; மனம் தெளியும், தன்னைப் போலப் பிறரை மதிக்கும் தயவும் சமநோக்கும் உண்டாகும். தாம் யாரோ அவரே பிறர், எல்லாரும் சுத்தான்ம வடிவங்கள் என்ற ஒருமையுண்டாகும். ஆன்ம நேயம் வளரும். தன்பசிபோலப் பிறர்பசி தீர்க்கும் கருணையும் ஈகையும் விளங்கும். பிறகு தன்னுயிர் போல மன்னுயிரைக்காணும் ஜீவதயை உண்டாகும். அப்போது மனிதன் தன் உடலைப் பெருக்கப் பிறவுயிர்களைக் கொன்றுண்ணன். உயிர்க் கருணையாலே போர்ப்பேயும் ஒழியும் ; உலகம் அமைதி பொலியும். அப்போது உலகில் தனி உடைமை இராது, பொதுவுடைமைச் சுயேச்சா திகாரம் நாசவேலை செய்யாது. எல்லாம் அருளுடைமை யாகும். தனக் கும் புவிக்கும் மேலே ஒரு தலைவன் இருக்கிறன் என்பதை உணர் வோம். ஆகாயத்தில் நட்சத்திரங்கள் எவ்வளவு ஒழுங்காகப் பவனி சென்று அருணக்கதிரிற் கலக்கின்றன ; அதேபோல் மானிட வாழ்வும்

தோன்றாத் துணையான இறைவன் திருவருள் வழியபடியே தர்மசாதனம் செய்து, தூயசுதந்தர வழியில் இயல்பாக நடந்து, சமத்துவம் பேணி, அனைத்திற்கும் தாயகமும் தாரகமும் ஆன இறைவன்அருளைக் கூடும். மனிதவாழ்வு இறைவன் அருளின் எழுந்து, அருளின் வாழ்ந்து அருளிற் கலப்பதே இயற்கையான தூய மெய்வழியாகும். இந்த வழி எல்லா மதங்களுக்கும் பொதுவாகும். இதுவே சுத்தசன்மார்க்கம் என்பது. இந்தத் தூய மெய்வழியை விளக்கவே உலகிற்குப் பலஅருட் செல்வர் போந்தனர். வேதரிஷிகள் முதல் வள்ளலார் வரையில் எத்தனையோ அருட்செல்வர் சன்மார்க்க ஒளிகாட்டிச் சென்றனர். அவர்கள் இன்று நம்முள் பாமாலையாக விளங்குகிறார்கள். அவர்கள் அருளிய திருவாக்குகள் மானிடத்தைத் தெய்வநிலைக்கு உயர்த்தும்.

வேதம், உபநிஷத்துக்கள், கீதை முதலியன வடமொழியில் உள்ள அருட்செல்வங்கள். உலகம் இவற்றை அறியும். தென்மொழியான தமிழில் ஏராளமான அருட்செல்வம் குவிந்துகிடக்கிறது. அஃது ஒப்புயர்வற்ற கடவுட் செல்வம்; உலகின் அற்புதங்களில் ஒன்று. மாணிக்கவாசகர், அப்பர், சுந்தரர், சம்பந்தர், நக்கீரர், காரைக்கால் அம்மையார், சேக்கிழார், கம்பர், வள்ளுவர், ஔவை, அருணகிரி, பட்டினத்தார், தாயுமானர், அருட்சோதி வள்ளலார், நம்மாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் போன்ற நிறைமொழியாளர் வாக்கமுதே வேதம்—இந்த வாக்குகள் உலகிற்கெல்லம் நலந்தரும் தமிழ்ச்செல்வம். அருட்புலவர் உள்ளமும் தெள்ளறிவும், ஆர்வப்பெருக்கும், அன்பு வெள்ளமும், கடவுட் காட்சியும், கனிந்த திருவாக்குமே இங்கே அருட்செல்வமாகத் தொகுக்கப்பெற்றுள்ளன. இவற்றுடன் யோகசித்தியும் பாரதசக்தியும் சேர்ந்தவை. இந்த நூல் எக்காலத்திற்கும் பயனாகும் பொதுமறையாகும். பல நூல்களை ஆராய்ந்து கருத்துக்களைத் தேர்ந்து தேர்ந்து, பாசுரங்களை நிரல்படக் கோத்து நீண்ட உழைப்பினால் இந்த அருட்செல்வத்தை உருவாக்கியிருக்கிறேன். நம்மவருக்கு பைபிள் குரான் கீதை வேதம் போன்று நிலையான ஒரு தெய்வநூல் இருக்கவேண்டும் என்ற ஆர்வத்துடன் இதை அமைத்திருக்கிறேன். சைவம், வைணவம், சாக்தம், கிறிஸ்துவம், இஸ்லாம், பௌத்தம், சமணம் என்ற மதவுணர்ச்சியுடன் அன்று. எல்லாருக்கும் பயனாகும் பொதுவுணர்ச்சியுடனேதான் இதைச் செய்திருக்கிறேன். சிவம் என்றால் இன்பமளிக்கும் இறைவன், விஷ்ணு என்றால் எங்கும் நிறைந்து நலந்தரும் கடவுள் எனக்கொள்க. இதிற் சேர்க்கவேண்டிய பிறநூல்கள் பல உண்டு. ஆனால் எல்லாத் தீர்க்கதரிசிகளின் கருத்துக்களும் இந்த நூலில் அடக்கம். சொன்னதையே திருப்பித்திருப்பிச் சொல்லத் தேவையில்லை. இந்த அருட்செல்வத்

தைக் கற்ருல் உலகின் அருட்கருத்துக்கள் புலனுகும். அருட்பெரியார் அனைவரும் உலகிற்குக் காட்டிய உண்மைநெறி விளங்கும். விரிவாக எல்லா மதங்களையும் தத்துவங்களையும் அறியவேண்டுவோர் பாரத சக்தியைக் கற்கலாம். இந்நூலிற் கண்ட அருட் பெரியார் வரலாறு தனி நூலாக வரும்.

இந்த அருட்செல்வம் வெளிவரப் பொருட்செல்வம் உதவிய அன்புமணி திரு. சென்னியப்ப முதலியார் வாழ்க! இது சென்னை சுத்தசங்க வெளியீடாகும்.

அருட்செல்வம் பாராயண நூல். பள்ளிக்கூடங்களிலும் பொதுக் கூட்டங்களிலும் கடவுள் வணக்கத்திற்கென்றே தொகுக்கப்பெற்ற நூல். சன்மார்க்கப் பிரசாரகர்களுக்குக் கையடக்கமான புத்தக சாலை போன்றது. இந்த நூலைக்கொண்டு பேசலாம், எழுதலாம், உணரலாம் அருட்பேறு பெறலாம், பேரின்புறலாம். காலைமாலை தூயநிலையிலிருந்து, அமைதியாக அமர்ந்து, வீட்டிலும் நாட்டிலும் அன்பர் கூடி அருட் செல்வத்தைச் சேர்ந்து பாடுக! தக்கார் விளக்குக! இந்தப் பாசுரங் களைக்கொண்டே இன்னும் மற்ற அருளாளர் உள்ளத்தையும் விளக்க லாம். அருட்பெரியார் வரலாறுகளைச் சொல்லலாம். பௌர்ணமி, தீபாவளி பொங்கல் நாட்களில் இரவில் அன்பர் ஊர்வலம் வந்து தெருத்தெருவாக அருட்செல்வத்தைப் பாடி விளக்கலாம். இதனுல் ஊர்தோறும் அருளுணர்ச்சி தழைக்கும். அன்பு பெருகும். ஒற்றுமை இயலும். தீமை ஒழியும். நன்மை விளையும்.

**பொருட்செல் வத்தின் போர்வினை நீங்க**
**அருட்செல் வத்தை அனைவரும் வளர்ப்போம்!**

புதுயுக நிலையம்
புதுச்சேரி

**சுத்தானந்த பாரதி**

**க—தை—சுூ௦௳ரு.**

**14—1—1950**

## அருள் வாழ்த்து

எல்லாம் வல்ல இறைவனையே
இதயங் கலந்து வாழ்ந்திடுவோம்
பொல்லா வினைகள் போக்கியிங்கே
புண்ணியங்கள் புரிந்திடுவோம்
சொல்லும் செயலும் ஒன்றான
சுத்தசங்கத் திருத் தொண்டர்
வெல்லும் சக்தி பெற்றிடுவோம்
விரிவான் அப்பன் அருளாலே.

அருளே உலகை ஆக்குவதும்
ஆன்ற உலகைக் காப்பதுவும்
அருளே உலகை ஆளுவதும்
அணி வகுத்து நடத்துவதும்
இருளே போக்கி இருவினையின்
இடரை நீக்கித் தூயபரம்
பொருளே விளக்கப் பொதுமன்றம்
பொலியும் அருளைப் போற்றுவமே.

## சிவஞானபோதம்

அவன் அவள் அது எனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி, மலத்து உளதாம் ;
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

அவையே தானே ஆய், இரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

உளது இலது என்றலின், ஏனதுடல் என்றலின்,
ஐப்புலன் ஒடுக்கம் அறிதலின், கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்,
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணராது
அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று
அஞ்சு அவத்தைத்தே.

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு,
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம் தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே.

உணர் உரு அசத்து எனின்; உணராது இன்மையின் ;
இருதிறன் அல்லது சிவசத்தாம் என
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது ; அசத்தில தறியாது ;
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி,
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணுமஞ் செழுத்தே.

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகன் ஆகி இறைபணி நிற்க
மலமாயை தன்னெடு வல்வினை யின்றே.

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்,
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

செம்மலர் நோன்தாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே.

(மெய்கண்டார்)

உ

# அருட் செல்வம்

(நம் வேதம்)

## 1. அருட்பா

உலகநிலை முழுதாகி ஆங்காங் குள்ள
உயிராகி, உயிர்க்குயிராம் ஒளிய தாகிக்
கலகநிலை அறியாத காட்சி யாகிக்
கதியாகி மெஞ்ஞானக் கண்ண தாகி,
இலகுசிதா காசமாய்ப் பரமா காச
இயல்பாகி இணையொன்றும் இல்லா தாகி,
அலகில்அறி வானந்தம் ஆகிச் சச்சி
தானந்த மயமாகி அமர்ந்த தேவே.

சகமாகிச் சிவனும், ஈச னுகிச்
சதுமுகனுய்த் திருமாலாய் அரன்தா னுகி
மகமாயை முதலாய்க் கூடத்த னுகி,
வான்பிரமம் ஆகி, அல்லா வழக்கு மாகி,
இகமாகிப் பரமாகிச் சமய கோடி
எத்தனையும் ஆகிஅவை எட்டா வான்கற்
பகமாகிப் பரமாகிப் பரம மாகிப்
பராபரமாய்ப் பரம்பரமாய்ப் பதியுந் தேவே.

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத்
தடம்பொழிற்பூ மணம்வீசத் தென்றல் வீச,
எண்ணமுதப் பளிங்குநிலா முற்றத்தே இன்
னிசைவீசத் தண்பனிநீர் எடுத்து வீசப்
பெண்ணமுதம் அனையவர்வின் ணமுதம் ஊட்டப்
பெறுகின்ற சுகமனைத்தும் பிறப்பட் டோடக்
கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்தும் இன்பங்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுள் தேவே,

பொங்குபல மதங்களெனு நதிக ளெல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி யோங்கும்
கங்குகரை காணாத கடலே, எங்கும்
கண்ணாகக் காண்கின்ற கதியே, அன்பர்
தங்கநிழற் பரப்பிமயற் சோடை யெல்லாம்
தணிக்கின்ற தருவே, பூந் தடமே, ஞானச்
செங்குமுத மலரவரு மதியே, எல்லாம்
செய்யவல்ல கடவுளே தேவ தேவே.

பேதமுறு மெய்ப்போத வடிவ மாகிப்
பெருங்கருணை நிறம்பழுத்துச் சாந்தம் பொங்கிச்
சீதமிகுந் தருள்கனிந்து கனிந்து மாறாச்
சின்மயமாய் நின்மலமே மணந்து நீங்கா
ஆதரவோடு இயல்மௌனச் சுவைமேற் கொண்டு
ஆனந்த ரசம்ஒழுகி அன்பால் என்றும்
சேதமுறு தறிஞருளம் தித்தித் தோங்கும்
செழும்புனிதக் கொழுங்கனியே தேவ தேவே. 5

நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து, நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந் தருளமுதே நன்னிதியே, ஞான
நடத்தரசே, என்னுரிமை நாயகனே என்று
வனைந்து வனைந் தேத்துதுநாம் வம்மின்உல கீரே
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்.
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியம்சொல் கின்றேன்.
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருணம் இதுவே.

சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே,
ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்,
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல்அழ கலவே.
நீதியிலே, சன்மார்க்க நிலையினிலே ஞான
நிருத்தமிடும் தனித்தலைவர் ஒருத்தர்அவர் தாமே
வீதியிலே அருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றேன் உமையே.

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே,
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே,
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே,
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே.

நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே,
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே.
எல்லார்க்கும் பொதுவில்நடம் ஆடுகின்ற சிவமே,
என்னரசே யான்புகலும் இசையும்அணிந் தருளே.

கோடையிலே இளைப்பாறிக் கொள்ளும்வகை கிடைத்த,
குளிர்தருவே தருநிழலே, நிழல்கனிந்த கனியே,
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீ ரிடைமலர்ந்த சுகந்தமண மலரே,
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே,
மென்காற்றில் விளைசுகமே, சுகத்திலுறும் பயனே.
ஆடையிலே எனைமணந்த மணவாளா, பொதுவில்
ஆடுகின்ற அரசேயென் அலங்கல்அணிந் தருளே.

அருள்விளக்கே, அருட்சுடரே, அருட்சோதி சிவமே,
அருளமுதே அருள்நிறைவே, அருள்வடிவப் பொருளே,
இருள்கடிந்தென் உளமுழுதும் இடங்கொண்ட பதியே,
என்னறிவே என்னுயிரே, எனக்கினிய உறவே,
மருள்கடிந்த மாமணியே, மாற்றறியாப் பொன்னே,
மன்றில்நடம் புரிகின்ற மணவாளா எனக்கே,
தெருள்அளித்த திருவாளா, ஞானவுரு வாளா,
தெய்வநடத் தரசேநான் செய்மொழியேற் றருளே. 10

## 2. *மாணிக்க வாசகம்*

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க !
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க !

கோகழி யாண்ட குருமணிதன் தாள் வாழ்க !
ஏகன் அநேகன் இறைவனடி வெல்க !
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க !

ஈசனடி போற்றி ! எந்தையடி போற்றி !
தேசனடி போற்றி ! சிவன்சே வடிபோற்றி !
நேசத்தே நின்ற நிமலனடி போற்றி !

உய்யஎன் உள்ளத்தே ஓங்காரமாய் நின்ற
மெய்யா, விமலா விடைப்பாகா, வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே !

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலே
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று,
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான் !

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே,

ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருகினார் ஆருயிராய் நின்றானே,

போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே,
காக்குமெங் காவலனே, காண்பரிய பேரொளியே !

தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றிஎம் வைப்பே போற்றி !

அழிவிலா ஆனந்த வாரி போற்றி !
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி

தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி !

அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவா போற்றி !

பரம்பரஞ் சோதி பரனே போற்றி
போற்றி போற்றி சயசய போற்றி !

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி யுள்ளம்
பொய்தான் தவிர்த்துன்னைப் போற்றி சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழவிடேன் உடையாய், என்னைக் கண்டுகொள்ளே !

ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி ! வானோர்
குருவனே போற்றி, எங்கள் கோமளக் கொழுந்து போற்றி !
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி,
தருகநின் பாதம் போற்றி, தமியனேன் தனிமை தீர்த்தே !

வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி, யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே !

நாடகத்தால் உன்அடியார் போல்நடித்து நான் நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்,
ஆடகச்சீர் மணிக்குன்றே, இடையறா அன்புனக்கென்
ஊடகத்தே நின்றுருகத் தந்தருளெம் உடையானே !

பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்கள் அனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே ! 30

சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறர்உருவம் யான்எனதென் உரைமாய்த்துக்
கோதில்அமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே !

பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் அறுத்தருளிப்
பித்தனிவ னெனஎன்னை ஆக்குவித்துப் பேராமே
சித்தமெனும் திண்கயிற்றால் திருப்பாதம் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே !

உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன், கற்பனவும் இனியமையும்
குற்றாலத்து அமர்ந்துறையும் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன் ;
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந் தென்னுள்ளம் புகுந்தடியேற் கருள் செய்தான் ;
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்தேனே !

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன்எனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே ! 35

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து, பாசமெனும் தாழ்உருவி,
உய்யுநெறி காட்டுவித்திட்டு, ஓங்காரத் துட்பொருளை
ஐயன் எனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே !

சிந்தனைநின் றனக்காக்கி, நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி,
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி, வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே, மலையே உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே !

வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி லீறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதா யாண்டு கொண்டவா,
ஊனை நாடகம் ஆட்டு வித்தவா
உருகி நான் உனைப் பருக வைத்தவா,
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே.

பாட வேண்டுநான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்கு
ஆட வேண்டுநான் போற்றி ! அம்பலத்து
ஆடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி ; யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி ! பொய்யெலாம்
வீட வேண்டுநான் போற்றி ! வீடுதந்து
அருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே !

ஈசனேநீ யல்ல தில்லை இங்கு மங்கும் என்பதும்
பேசினேனொர் பேத மின்மை பேதையேன்என் எம்பிரான் ;
நீசனேனை ஆண்டுகொண்ட நின்மலாவொர் நின்னலால்
தேசனே வொர் தேவர் உண்மை சிந்தியாது சிந்தையே. 40

என்னைஅப்பா அஞ்சல் என்பவர் இன்றிநின் றெய்த்த லைந்தேன்
மின்னைஒப்பாய் விட்டிடுதி கண்டாய் உவமிக்கின், மெய்யே
உன்னைஒப்பாய், மன்னும் உத்தரகோச மங்கைக் கரசே,
அன்னைஒப்பாய் எனக்கு அத்தனொப்பாய்என் அரும்பொருளே !

பொருளே தமியேன் புகலிடமேநின் புகழ்இகழ்வார்
வெருளே எனைவிட் டிடுதிகண்டாய் மெய்யார் விழுங்கும்
அருளே அணிபொழில் உத்தர கோசமங்கைக் கரசே
இருளே வெளியே இகபர மாகி யிருந்தவனே.

ஆனைவெம் போரில் குறுந்தூறெனப் புலனால் அலைப்புண்
டேனை, எந்தாய் விட்டிடுதி கண்டாய், வினையேன் மனத்துத்
தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து
ஊனையும் என்பினையும் உருக்காநின்ற ஒண்மையனே.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்,
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே, விம்மி விம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள், கிடந்தாள் என்னே என்னே
ஈதேஎந் தோழி பரிசேலோர் எம்பாவாய் !

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே,
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே,
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ; ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவர் ஆவார் ; அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்
இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்,
என்ன குறையும் இலோமேலோர் எம்பாவாய் ! 45

ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையில்
மேயானை, வேதியனை, மாதிருக்கும் பாதியனை,
நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்
தாயான் தத்துவனைத் தானே யுலகேழும்
ஆயானை ஆள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய்.

ஊனாய் உயிராய் உணர்வாயென் உட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோர் அறியா வழியெமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய் !

ஞானக் கரும்பின் தெளிவைப் பாகை
நாடற்கரிய நலத்தை, நந்தாத்
தேனைப் பழஞ்சுவை யாயினானைச்
சித்தம் புகுந்துதித் திக்கவல்ல

கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்
பானற் றடங்கண் மடந்தை நல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்து நாமே.

வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாயிருள் ஆயினார்க்குத்
துன்பமு மாயின்ப மாயினார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயினார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினாருக்கு
ஆதியும் அந்தமும் ஆயினாருக்கு
ஆடற்பொற் சுண்ணம் இடித்துநாமே !

நானார்என் உள்ளமார் ஞானங்க ளாரென்னை யாரறிவார்
வானோர் பிரானென்னை யாண்டிலனேல், மதிமயங்கி
ஊனார் உடைத்தலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ. 50

தினைத்தனை யுள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே ;
நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ !

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்ஆட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ......

கரணங்க ளெல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ

கன்னார் உரித்தன்ன என்னையுந்தன் கருணையினாற்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி,
மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்
தென்னா தென்னாவென்று தெள்ளேணம் கொட்டாமோ !

வான்கெட்டு மாருத மாய்ந்து அழல்நீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ ! 55

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலும் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ !

நானந்த மில்லான் தனையடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ !

பேராசை யாமிந்தப் பிண்டமறப் பெருந்துறையான்
சீரார் திருவடி யென்றலைமேல் வைத்தபிரான்
காரார் கடல்நஞ்சை உண்டுகந்த காபாலி
போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ ?

உரைமாண்ட உள்ளொளி உத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோள்நோக்கம் ஆடாமோ ?

உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி யாடும் அணிமயில்போல்
என்னத்தன் என்னையுமாட் கொண்டான் எழில்பாடிப்
பொன்னுரைத்த பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ ! 60

நித்த மணாளர் நிரம்ப அழகியர்
சித்தத் திருப்பரால் அன்னே எனும்
சித்தத் திருப்பவர் தென்னன் பெருந்துறை
அத்தரா னந்தரால் அன்னே என்னும்.

தேன்பழச்சோலை பயிலும் சிறுகுயிலே, இது கேள்நீ
வான்பழித்து இம்மண்புகுந்து, மனிதரை ஆட்கொண்டவள்ளல்,
ஊன்பழித்து உள்ளம்புகுந்தென் உணர்வது வாய ஒருத்தன்,
மான்பழித் தாண்டமென் னோக்கி மணாளனை நிவரக் கூவாய் !

உன்னை உகப்பன் குயிலே, உன்துணைத் தோழியும் ஆவன்
பொன்னை யழித்தநன் மேனிப் புகழிற் றிகழு மழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல், பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங் கன்வரக் கூவாய் !

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது ; பூங்கழற் கிணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் திருமுகத் தெமக்கருண் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே,
ஏற்றுயர் கொடியுடை யாய், எனை யுடையாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தரு ளாயே.

பூதங்கள் தோறுநின் றாய்எனின் அல்லாற்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புகல்வோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயற்றிருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்அரியாய், எங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்தெம்மை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே ! 65

அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு
அரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழில்திரு வுத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா,
எதுஎமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே !

அரைசே பொன்னம் பலத் தாடும்
அமுதே என்றுன் அருள் நோக்கி
இரைதேர் கொக்கொத்து இரவுபகல்
ஏசற் திருந்தே வேசற்றேன்.
கரைசேர் அடியார் களி சிறப்பக்
காட்சி கொடுத்துன் அடியேன்பாற்
பிரைசேர் பாலில் நெய்போலப்
பேசா திருந்தால் ஏசாரோ !

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத்து, அமுதே
ஊறிநின்று என்னுள் எழும்பரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்

தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே,
ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே என்னுடை யன்பே.

குறைவிலா நிறைவே, கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே,
சிறைபெரு நீர்போற் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் உடலிடம் கொண்டாய்
இனியுனை என்இரக் கேனே.

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை.
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றும் நீ யல்லை ; அன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே?

சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்
ஒருவனே, சொல்லுதற்கு அரிய
ஆதியே நடுவே அந்தமே, பந்தம்
அறுக்குமா னந்தமா கடலே,
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே,
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் இணையடி தந்தே.

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர் ?
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன் ;
யாதுநீ பெற்றதொன் றென்பால் ?
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்
யானிதற் கிலனொர்கைம் மாறே.

வெறுப்பனவே செய்யும் என் சிறுமையைநின் பெருமையினுற்
பொறுப்பவனே அராப் பூண்பவனே, பொங்கு கங்கைசடைச்
செறுப்பவனேநின் திருவருளால் என் பிறவியை வேர்
அறுப்பவனே உடையாய் அடியேன் உன் அடைக்கலமே.

வழங்குகின் றுய்க்குன் அருளார் அமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேன்என் விதியின்மையால் ;
தழங்கருந் தேன்அன்ன தண்ணீர் பருகத்தந்து உய்யக்கொள்ளாய்
அழுங்குகின்றேன் உடையாய் அடியேன்உன் அடைக்கலமே.

நெக்கு நெக்குள் உருகியுருகி, நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்,
நக்கு மழுதுந் தொழுதும்வாழ்த்தி நானு விதத்தாற் கூத்து நவிற்றிச்
செக்கர் போலுந் திருமேனி திகழ நோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்கு நிற்ப தென்றுகொல்லோ என் பொல்லாமணி யைப் புணர்ந்தே. 75

பாரொடு விண்ணுய்ப் பரந்தஎம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே,
யாரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன் ?
ஆண்டநீ அருளிலை யானுல்,
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே

பரிதிவாழ் ஒளியாய், பாதமே அல்லாற்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே,
கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக்
கலந்துநான் வாழுமாறு அறியா
மருளனேன் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென்று அருள்புரி யாயே !

முத்தனே முதல்வா முக்கணு முனிவா
மொட்டரு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்த மேவியசீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே !

கூறும் நாவே முதலாகக் கூறுங்கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை ; மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கில்
தேறும் வகை என் சிவலோகா திகைத்தால் தேற்ற வேண்டாவோ ?

அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே அனையாய் என்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ ?
இன்றோர் இடையூ றெனக்குண்டோ? எண்தோள் முக்கண் எம்மானே,
நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே ? 80

நானார்அடி யணைவான் ஒரு நாய்க்குத்தவி சிட்டிங்கு
ஊனார்உடல் புகுந்தான்உயிர் கலந்தான் உளம் பிரியான் ;
தேனார்சடை முடியான் மன்னு திருப்பெருந்துறை யுறைவான்
வானோர்களும் அறியாததோர் வளமீந்தனன் எனக்கே.

கடலின்திரை யதுபோல்வரும் கலக்கம்மலம் அறுத்தென்
உடலும்என துயிரும்புகுந்து ஒழியாவண்ண நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய திருப்பெருந்துறை யுறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள் பரன்றான்செய்த படிறே...

வேண்டேன்புகழ் வேண்டேன் செல்வம்
வேண்டேன் மண்ணும் விண்ணும்
வேண்டேன் பிறப்பிறப்புச் சிவம்
வேண்டார்தமை நாளும்.
தீண்டேன் சென்று சேர்ந்தேன் மன்னு
திருப்பெருந்துறை யிறைதாள்
பூண்டேன் புறம் போகேன்இனிப்
புறம் போகலொட் டேனே

வன்புலால் வேலும் அஞ்சேன் வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்
என்பெலாம் உருக நோக்கி அம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை ஏத்தி இனிதருள் பருகமாட்டா
அன்பிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே...

வாளுலாம் எரியும் அஞ்சேன் வரைபுரண் டிடினு மஞ்சேன் ;
தோளுலா நீற்றன் ஏற்றன் சொற்பதம் கடந்த அப்பன்
தாளதா மரைகள் ஏந்தித் தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டால், அம்மநாம் அஞ்சு மாறே 85

கோணிலா வாளி அஞ்சேன் கூற்றுவன் சீற்றம் அஞ்சேன் ;
நீணிலா அணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு
வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்தமாட்டா
ஆணலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே.

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே,
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே ?

அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே,
பொருளுடைக் கலையே, புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே,
தெருளிடத்து அடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே ?

ஒப்புனக் கில்லா ஒருவனே, அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே,
செப்புதற்கு அரிய செஞ்சுடர் மூர்த்தி
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத்து உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே ?

பால்நினைத் தூட்டுந் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து, புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே ?

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி, எளியையாய் ஆண்ட
ஈசனே மாசிலா மணியே,

துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காந்
    தொடக்கெலாம் அறுத்தநற் சோதி,
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
    எங்கெழுந் தருளுவ தினியே ?

ஊசலாட்டுமிவ் வுடலுயி ராயின் இருவினை யறுத் தென்னை
ஓசையாலுணர் வார்க்குணர் வரியவன் உணர்வுதந் தொளியாக்கிப்
பாசமானவை பற்றறுத் துயர்ந்ததன் பரும்பெருங் கருணையால்
ஆசைதீர்த்தடி யாரடிக் கூட்டிய அற்புதம் அறியேனே.

பாருரு வாய பிறப்பற வேண்டும்
    பத்திமை யும்பெற வேண்டும்.
சீருரு வாய சிவபெரு மானே
    செங்கமல மலர் போல
ஆருரு வாயவென் ஆரமுதேயுன்
    அடியவர் தொகை நடுவே
ஓருரு வாயநின் திருவருள் காட்டி
    என்னையும் உய்யக்கொண் டருளே.

பத்தில னேனும் பணிந்தில னேனும் உன்
    உயர்ந்தபைங் கழல் காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும்
    பிறப்பறுப் பாயெம் பெருமானே
முத்தனை யானே மணியனை யானே
    முதல்வனே முறையோ வென்று
எத்தனை யானும் யான்தொடர்ந் துன்னை
    யினிப்பிரிந் தாற் றேனே.

தாமே தமக்குச் சுற்றமும்
    தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார்
    என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
    அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
    புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே 95

விடுமின் வெகுளி வேட்கைநோய்
    மிகவோர் காலம் இனி இல்லை ;
உடையான் அடிக்கீழ்ப் பெருஞ் சாத்தோடு
    உடன்போ வதற்கே ஒருப்படுமின்,

அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணியார் கதவ தடையாமே
புடைபட் டுருகிப் போற்றுவோம்
புயங்கன் ஆள்வான் புகழ்களையே.

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்தி வைத்திட்டு,
இகழ்மின் எல்லா அல்லலையும்
இனியோர் இடையூ றடையாமே;
திகழும் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்தாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே.

தாயாய் முலையைத் தருவானே
தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனே
நம்பி யினித்தா னல்குதியே
தாயே என்றுன் தாள டைந்தேன்
தயாநி என்பால் இல்லையே
நாயேன் அடிமை யுடனாக
ஆண்டாய் நான்றான் வேண்டாவோ !

ஞானவா ளேந்துமையர் நாதப் பறையறைமின் !
மானமா ஏறுமையர் மதிவெண் குடைகவிமின் !
நானநீற் றுக்கவச மடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோநா மாயப்படை வாராமே !

வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதா யமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. 100

## 3. வாகீசம்

*நா*மார்க்கும் குடியல்லோம் ; நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் ; நடலை யில்லோம் ;
ஏமாப்போம் ; பிணியறியோம் ; பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை ;

தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரநற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே...

அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை ; அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழ்ஒளியைத் தேவர்கள்தங் கோனை ; மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

அப்பநீ அம்மைநீ ஐயனும்நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓர்ஊரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்து நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே,

நின்னுவார் பிறர்அன்றி நீயே யானாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்தும் ஆனாய்
மன்ஆனாய் மன்னவர்க்கோர் அமுத மானாய்
மறைநான்கும் ஆனாய் ஆறு அங்கமானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே, யுன்னை
என்னானாய் என்னானாய் என்னின் அல்லால்
ஏழையேன் என்சொல்லி ஏத்துகேனே !

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன், நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்;
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன் ;
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே. 105

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவேயென் உறவேஎன் ஊனே, ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவேஎன் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய் ;
அருவாய வல்வினைநோய் அணுகா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.

ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே ?
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே ?
காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே
காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக் காலே ?

அத்தாவுன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்
அருள்நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்.
எத்தனையும் அரியநீ எளியை ஆனாய் ;
எனையாண்டு கொண்டிரங்கி ஏன்று கொண்டாய்
பித்தனேன் பேதையேன், பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ, ஐய ஐயோ
எம்பெருமான் திருக்கருணை இருந்த வாறே.

சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து,
தரணியொடு வானாளத் தருவ ரேனும்,
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்லர் ஆகில் ;
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே.

எத்தாயர் எத்தந்தை எச்சுற் றத்தார்
எம்மாடு சும்மாடாம், ஏவர் நல்லார் ?
செத்தால்வந்து உதவுவார் ஒருவர் இல்லை ;
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்,

சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா, என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்ருல்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே? 110

நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண்
ஞானப் பெருங்கடற்குஓர் நாவாய் அன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன்தான்காண்
புரிசடைமேல் புனல்ஏற்ற புனிதன் தான்காண்
சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் தான்காண்,
தன்மைக்கண் தானேகாண் தக்கோர்க் கெல்லாம்
காரணன்காண், காளத்தி காணப் பட்ட
கணநாதன்காண் அவன்என் கண்ணு ளானே.

வானவன்காண் வானவர்க்கும் மேலா னுன்காண்
வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன்காண், ஆனைந்தும் ஆடி னுன்காண்,
ஐயன்காண், கையிலனல் ஏந்தி ஆடும்
கானவன்காண், கானவனுக்கு அருள்செய் தான்காண்
கருதுவார் இதயத்துக் கமலத் தூறும்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் ருன்காண்
சிவன்அவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் தானே.

அல்லிமலர் நாற்றத் துள்ளார் போலும்
அன்புடையார் சிந்தை அகலார் போலும்
சொல்லின் அருமறைகள் தாமே போலும்,
தூநெறிக்கு வழிகாட்டும் தொழிலார் போலும்
வில்லிற் புரமூன் றெரித்தார் போலும்,
வீங்கிருளும் நல்வெளியும் ஆனுர் போலும்;
எல்லி நடமாட வல்லார் போலும்
இன்னம்பர்த் தான்ருேன்றி யீச னுரே.

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்ருன் தன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திரு ஆலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

தூண்டு சுடர்அனைய சோதி கண்டாய்
தொல்அமரர் சூளா மணிதான் கண்டாய் ;
காண்டற்கு அரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே

திருமணியைத் தித்திக்கும் தேனைப் பாலைத்
தீங்கரும்பின் இன்சுவையைத் தெளிந்த தேறல்
குருமணியைக் குழல்மொந்தை தாளம் வீணை
கொக்கரையின் சச்சரியின் பாணி யானைப்
பருமணியைப் பவளத்தைப் பசும்பொன் முத்தைப்
பருப்பதத்தி லருங்கலத்தைப் பாவந் தீர்க்கும்
அருமணியை ஆரூரில் அம்மான் தன்னை
அறியாது அடிநாயேன் அமர்ந்த வாறே !

மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை
மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை எழுத்தல்லை ; எரியும் அல்லை
இரவல்லை பகலல்லை யாவும் அல்லை
பெண்ணல்லை, ஆணல்லை, பேடும் அல்லை,
பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே.
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை அல்லை ;
உணர்வரிய ஒற்றியூர் உடைய கோவே.

எல்லா உலகமும் ஆனாய் நீயே ;
ஏகம்பம் மேவி இருந்தாய் நீயே ;
நல்லாரை நன்மை அறிவாய் நீயே
ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ !

ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே
உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலாம் ஆனாய் நீயே
மலையான் மருகனாய் நின்றாய் நீயே

பேசப் பெரிதும் இனியாய் நீயே
பிரானும் அடியென்மேல் வைத்தாய் நீயே
தேச விளக்கெலாம் ஆனாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதி.

முத்தினை மணிதன்னை மாணிக் கத்தை,
மூவாத கற்பகத்தின் கொழுந்து தன்னைக்
கொத்தினை வயிரத்தைக் கொல்லே றூர்ந்து
கோளரவொன் றாட்டுங் குழகன் றன்னைப்
பத்தனைப் பத்தர் மனத்து ளானைப்
பரிதிபோல் திருமேனி யுடையான் தன்னை
அத்தனை ஆரூரில் அம்மான் தன்னை
அறியாது அடிநாயேன் அயர்ந்த வாறே. 120

மைப்படிந்த கண்ணாளும் தானும், கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னின் அல்லான் ;
ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஓர்ஊரன் அல்லன் ; ஓர் உவமன் இல்லி ;
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன், இந்நிறத்தன், இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.

தந்தையார் தாயார் உடன்பி றந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தாம் ஆரே.
வந்தவாறு எங்ஙனே ? போமாறு ஏதோ ?
மாமாயம் இதற்கேதும் மகிழ வேண்டாம்.
சிந்தையீர் உமக்கொன்று சொல்லக் கேண்மின் ;
திகழ்மதியும் வாள்அரவும் திளைக்கும் சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சி வாய
என்றெழுவார்க்கு இருவிசும்பில் இருக்க லாமே.

தலையானை, எவ்வுலகுந் தான்ஆ னானை
தன்உருவம் யாவர்க்கும் அறிய வொண்ணா
நிலையானை, நேசர்க்கு நேசன் தன்னை
நீள்வான முகடதனைத் தாங்கி நின்ற
மலையானை வரியரவு நாணாக் கோத்து
வல்அசுரர் புரமூன்றும் மடிய எய்த
சிலையானைத் திருநாகேச் சரத்து ளானைத்
தேராதார் நன்னெறிக்குச் சேரா தாரே.

தினைத்தனையோர் பொறையிலா உயிர்போம் கூட்டைப்
பொருள்என்று மிகவுன்னி, மதியால் இந்த
அனைத்துலகும் ஆளலாம் என்று பேசும்
ஆங்காரம் தவிர் நெஞ்சே, அமரர்க் காக
முனைத்துவரு மதில்மூன்றும் பொன்ற அன்று
முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தி மூழ்க
நினைத்தபெருங் கருணையன்நெய்த் தானமென்று
நினையுமா நினைந்தக்கால் உய்ய லாமே.

பற்றிநின்ற பாபங்கள் பாற்ற வேண்டில்,
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்,
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்,
சொல்லுகேன் கேள்நெஞ்சே, துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்,
உன்னையல்லால் ஒருதெய்வம் உள்கேன் என்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா, என்றும்
பொழிலாரூ ராவென்றே போற்று நில்லே. 125

நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்,
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே!

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள், தீவினைகாள், திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்கு
இல்லையே கிடந்துதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை அடங்கச் செய்யும்
எம்மான்றன் அடிதொடர்வான் உழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே!

உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத்து
உறுப்பினது குறிப்பாகும் ஐவீர், நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க்கு ஐயோ
வையகமே போதாதே யானேல், வானோர்

பொன்னுருவைத் தென்ஆரூர் மன்னு குன்றைப்
புவிக்கெழிலாம் சிவக்கொழுந்தைப் புகுந்தென் சிந்தை
தன்னுருவைத் தந்தவனை எந்தை தன்னைத்
தலைப்படுவேன், துலைப்படுப்பான் தருக்கேன் மின்னே!

எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்,
கழலடியே கைதொழுது காணின் அல்லால்,
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்;
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்;
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

ஒருவனையும் அல்லா துணரா துள்ளம்
உணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையும் மூவரையும் என்மேல் ஏவி
இல்லாத தரவறுத்தாய்க்கு இல்லேன்; ஏலக்
கருவரைசூழ் கானல் இலங்கை வேந்தன்
கடுந்தேர்மீது ஓடாமை காலாற் செற்ற
பொருவரையாய் உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

உள்ளமா யுள்ளத்தே நின்றாய் போற்றி
உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி;
வள்ளலே போற்றி! மணாளா போற்றி!
வானவர்கோன் தோள்துணித்த மைந்தா போற்றி
வெள்ளையே றேறும் விகிர்தா போற்றி
மேலோர்க்கு மேலோர்க்கும் மேலாய் போற்றி
தெள்ளுநீர்க் கங்கைச் சடையா போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி!

கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்.
ஏற்றா யடிக்கே யிரவும் பகலும்
பிரியாது வணங்குவ னெப்பொழுதும்!
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட,
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே!

நெஞ்சம் உமக்கே யிடமாக வைத்தேன்.
நினையா தொருபோது மிருந் தறியேன்.
வஞ்சம் இதுவொப் பதுகண் டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட,
நஞ்சாகிவந் தென்னை நலிவதனை
நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
அஞ்சே லுமென்னீர் அதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே !

தலையே நீ வணங்காய்—தலை—மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேரும் தலைவனைத் தலையே நீ வணங்காய்

கண்காள் காண்மின்களோ—கடல்—நஞ்சுண்ட கண்டன் றன்னை
எண்டோள் வீசிநின் றுடும்பி ரான்றன்னைக் கண்காள் காண்மின்களோ

நெஞ்சே நீ நினையாய்—நிமிர்-புன்சடை நின்மலனை
மஞ்சாடும் மலை மங்கை மணாளனை—நெஞ்சே நீ நினையாய்

ஆக்கை யாற்பயனென்—அரன்—கோயில் வலம்வந்து
பூக்கை யாலட்டிப் போற்றியென் னாதஇவ்—ஆக்கையாற்பயனென் ?

உற்றார் யார்உளரோ—உயிர்—கொண்டு போம்பொழுது ?
குற்றா லத்துறை கூத்தனல்லால் நமக்—குற்றார் ஆர்உளரோ ?

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்,
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும் ;
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே.
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே

நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீரும் கண்டு
நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே.

விறகில் தீயினன் பாலிற் படும்நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.

சுண்ணவெண் சந்தனச் சாந்தும், சுடர்திங்கட் சூளாமணியும்
வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ணல் அரண்முரண் ஏறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை.

பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே,
கலமலக் கிட்டுத் திரியும் கணபதி என்னும் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்றும் இல்லை ! அஞ்ச வருவதும் இல்லை.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே ! 145

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன்அஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலம் கோட்டம் இல்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே.




இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது,
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச் சிவாயவே !

அன்னம் பாலிக்கும் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே !

அல்லல் என்செயும் அருவினை என் செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும் ?
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்கு
எல்லை யில்லதோர் அடிமைபூண் டேனுக்கே ?

பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்.
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத் தனைப்பொழு தும்மறந் துய்வனோ ? 150

நீதியை நிறைவை மறை நான்குடன்
ஓதி யையொரு வர்க்கும் அறிவொண்ணுச்
சோதியைச் சுடர்ச் செம்பொனின் அம்பலத்து
ஆதி யையடி யேன்மறந் துய்வனே ?

பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னுர்வலம் செய்மறைக் காடரோ
கண்ணினுல் உமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே

(''சதுரம் மறைதான் துதிசெய்து வணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறை மைந்தா
இதுநன் கிறைவைத் தருள்செய்க எனக்குன்
கதவந் திருக் காப்புக்கொளுங் கருத்தாலே

சங்கம் தரளம் அவைதான் கரைக் கெற்றும்
வங்கக் கடல்சூழ் மறைக்காட் டுறைமைந்தா,
மங்கை உமைபா கமுமா கவிதென்கொல்
கங்கை சடைமேல் அடைவித்த கருத்தே.)

மாதர்ப் பிறைக்கண்ணி யானை, மலையான் மகளொடும்பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்
யாதும் சுவடுப டாமல், ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன் ! 155

வளர்மதிக் கண்ணியி னனை வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததொர் காலம் காண்பான் கடைக்கணிக்கின்றேன்.
அளவு படாததோர் அன்போ டையா றடைகின்ற போது,
இளமண நாகு தழுவி ஏறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப்பாதம் கண்டறி யாதன கண்டேன்.

ஈன்றுளு மாய்எனக் கெந்தையு மாய்உடன் தோன்றினராய்
மூன்று யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க,
ஏன்றுன் இமையவர்க் கன்பன் திருப்பாதிரிப் புலியூர்த்
தோன்றுத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே.

விடையான் விரும்பியென் உள்ளத் திருந்தான் ; இனி நமக்குஇங்கு
அடையா அவலம் ; அருவினை சாரா ; நமனை அஞ்சோம் ;
புடையார் கமலத்து அயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையான் அடியார் அடிஅடி யோங்கட்கு அரியதுண்டே ?

கருவாய்க் கிடந்துன் கழலே நினையும் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்.
தருவாய் சிவகதி நீ பாதிரிப் புலியூர் அரனே.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும் ; இவ் வையகத்தே
தொழுவார்க்கு இரங்கி யிருந்தருள்செய் பாதிரிப் புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே.

கருவுற் றிருந்துன் கழலே நினைந்தேன் ; கருப்புவியில்
தெருளிற் புகுந்தேன் திகைத்து அடியேன்றன் திகைப்பொழிவி.
உருவிற் றிகழும் உமையாள் கணவா, விடிற் கெடுவேன் ;
திருவிற் பொலிசத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே ! 160

ஓதிய ஞானமும் ஞானப் பொருளும் ஒலிசிறந்த
வேதியர் வேதமும் வேள்வியும் ஆவன, விண்ணுமண்ணும்
சோதியும் செஞ்சுடர் ஞாயிறும் ஒப்பன தூமதியோடு
ஆதியும் அந்தமும் ஆன ஐயாறன் அடித்தலமே.

சித்தத் துருகிச் சிவனெம் பிரான்என்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி தீர்த்தருளாய்.
மத்தத்தரக்கன் இருபது தோளும் முடியு மெல்லாம்
பத்துற் றுறநெரித்தாய் எம்மை யாளும் பசுபதியே.

நம்பனே எங்கள் கோவே நாதனே ஆதி மூர்த்தி
பங்கனே பரம யோகி என்றென்றே பரவி நாளும்
செம்பொனே பவளக் குன்றே திகழ்மலர்ப் பாதம் காண்பான்
அன்பனே அலந்து போனேன் அதிகைவீ ரட்டனீரே.

உறுகயி றூசல் போல ஒன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்
தறுகயி றூச லானேன் அதிகைவீ ரட்டனீரே.

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகீ
எத்தினாற் பத்தி செய்கேன் என்னைநீ இகழ வேண்டாம்.
முத்தனே முதல்வா, தில்லை அம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறே. 165

காயமே கோயி லாகக் கடிமனம் அடிமை யாக,
வாய்மையே தூய்மை யாக, மனமணி இலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈச னார்க்குப் போற்றவிக் காட்டி னோமே.

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம்களையைவாங்கிப்பொறையெனும்நீரைப்பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே.

வென்றிலேன் புலன்கள் ஐந்தும் வென்றவர் வளாகந் தன்னுள்
சென்றிலேன் ஆதலாலே செந்நெறி யதற்கும் சேயேன் ;
நின்றுளே துளும்பு கின்றேன் நீசனேன் ஈச னேயோ
இன்றுளேன் நாளை இல்லேன், என்செய்வான் தோன்றி னேனே.

பேச்சொடு பேச்சுக் கெல்லாம் பிறர்தமைப் புறமே பேசக்
கூச்சிலேன் ஆதலாலே கொடுமையை விடுமா றேரேன் ;
நாச்சொலி நாளும் மூர்த்தி நன்மையை உணர மாட்டேன்
ஏச்சுளே நின்று மெய்யே என்செய்வான் தோன்றி னேனே.

தானலா துலக மில்லை ; சகமலா தடிமை யில்லை;
கானலா தாடலில்லை ; கருதுவார் தங்க ளுக்கு
வானலா தருளு மில்லை ; வார்குழல் மங்கை யோடும்
ஆனலா தூர்வ தில்லை ஐயனை ஆற னூர்க்கே. 170

ஓம்பினேன் கூட்டை வாளா உள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை போலக் கருத்திற்றே முகக்க மாட்டேன்.
பாம்பின்வாய்த் தேரை போலப் பலபல நினைக்கின் றேனை
ஓம்பிநீ உய்யக் கொள்ளாய் ஒற்றியூர் உடைய கோவே.

கால்கொடுத்து எலும்பு மூட்டிக் கதிர்நரம் பாக்கை யார்த்துத்
தோல்உடுத்து உதிர மட்டித் தொகுமயிர் மேய்ந்த கூரை
ஓலெடுத்து உழைஞர் கூடி ஒளிப்பதற்கு அஞ்சு கின்றேன்
சேலுடைப் பழனஞ் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்து ளானே.

மனைவிதாய் தந்தை மக்கள் மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகில் உய்யலாம் நெஞ்சி னீரே.

பண்ணினுள் பாட லாகிப் பழத்தினில் இரத மாகிக்
கண்ணினுள் பார்வை யாகிக் கருத்தொடு கற்ப மாகி
எண்ணினுள் எண்ண மாகி ஏழுல கனைத்து மாகி,
நண்ணினுள் வினைகள் தீர்ப்பார் நனிபள்ளி யடிக ளாரே.

கரும்பினும் இனியான் றன்னைக் காய்கதிர்ச் சோதி யானை,
இருங்கடல் அமுதந் தன்னை இறப்பொடு பிறப்பி லானைப்
பெரும்பொருட் கிளவி யானைப் பெருந்தவ முனிவர் ஏத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்சம் அழகிதாம் நினைந்த வாறே. 175

உள்குவார் உள்ளத் தானை உணர்வெனும் பெருமை யானை
உள்கினேன் நானும் காண்பான் உருகினேன் ஊறி ஊறி
எள்கினேன் எந்தை பெம்மான் இருதலை மின்னு கின்ற
கொள்ளிமேல் எறும்பென் னுள்ளம் ; எங்ஙனம், கூடு மாறே.

அங்கத்தை மண்ணுக் காக்கி, ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னை
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்றாய் என்ற போதா இங்குற்றேன் என்கண் டாயே.

உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய் அட்டி உயிரெனும் திரி மயக்கி,
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்,
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே.

என்னி லாரும் எனக்கினி யாரில்லை
என்னிலும் இனியான் ஒருவன் உளன் ;
என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடி யேனையும் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே. 180

வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயகன் ஆதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே.

வேதம் ஓதில்என் ? வேள்விகள் செய்யில் என் ?
நீதி நூல்பல நித்தல் பயிற்றில் என் ?
ஓதி அங்கமோ ராறும் உணரிலென் ?
ஈசனை உள்கு வார்க்கன்றி இல்லையே.

நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென் ?
குன்றம் ஏறி இருந்தவம் செய்யில் என் ?
சென்று நீரிற் குளித்துத் திரியில்என் ?
என்றும் ஈசன் என்பார்க்கன்றி இல்லையே.

துஞ்சும் போதும் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கு நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்சனேன் இனி நான்மறக் கிற்பனே,

தாயுமாய் எனக்கே தலை கண்ணுமாய்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாயனார் என நம்வினை நாசமே. 185

இன்றுளார் நாளை யில்லை எனும்பொருள்
ஒன்றும் ஓரா துழிதரும் ஊமர்காள்
அன்று வானவர்க் காக விடம்உண்ட
கண்டனார் காட்டுப் பள்ளிகண் டுய்மினே.

பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும் ;
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே.

சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்,
கோத்திரமும் குலமுங்கொண் டென்செய்வீர் ?
பாத்திரம் சிவம் என்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளுமாற் பேறரே.

ஏதும் ஒன்றும் அறிவில ராயினும்
ஓதி அஞ்செழுத்தும் உணர்வார் கட்குப்
பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர்மாற் பேறரே.

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே ;
வண்டு லாமலர்ச் செஞ்சடை ஏகம்பன்
தொண்ட னாய்த்திரி யாய்துயர் தீரவே. 190

அல்லல் இல்லை அருவினை தானில்லை ;
மல்கு வெண்பிறை சூடும் மணாளனார்
செல்வ னார்திரு வேட்களம் கைதொழ
வல்ல ராகில் வழியது காண்மினே.

துன்ப மின்றித் துயரின்றி என்றுநீர்
இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்
என்பொன் ஈசன் இறைவனென் றுள்குவார்க்கு
அன்பன் ஆயிடும் ஆனைக்கா அண்ணலே.

நெஞ்சம் என்பதோர் நீள்கயம் தன்னுளே
வஞ்சம் என்பதோர் வான்சுழிப் பட்டுநான்
அஞ்சும் போழ்துநின் னாமத் திரு எழுத்து
அஞ்சு தோன்ற அருளும் ஐயாறரே.

கனியினும் கட்டிப் பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமுடி கவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கு இடைமருதனே.

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
ஆடிப் பாடியண் ணுமலை கைதொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே. 195

## 4. சம்பந்தம்

தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண் மதி சூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளம் கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந் தேத்த அருள் செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே.

நீர் பரந்த நிமிர் புன்சடை மேலோர் நிலாவெண் மதிசூடி
ஏர்பரந்தஇன வெள்வளை சோரஎன் உள்ளம் கவர்கள்வுன்
ஊர்பரந்த உலகின்முத லாகிய ஓர்ஊர் இதுவென்னப்
பேர்பரந்த பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே.

கற்றுங் கெரி யோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்று வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்று நின்றுரைப் பற்று பாவமே.

நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறை தாக்கும் பேரம்பலந் தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழல் ஏத்தும் இன்பம் இன்பமே.

அலையார் புனல் சூடி ஆகத் தொருபாகம்
மலையான் மகளோடு மகிழ்ந்தான் உலகேத்தச்
சிலையால் எயில் எய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னார்களே. 200

ஊனன்றும் பிணிபிறவி கேடென்றிவை
யுடைத்தாய வாழ்க்கை ஒழித்தவம்
மான்று மனங்கருதி நின்றீ ரெல்லாம்
மனந்திரிந்து மண்ணில் மயங்காதுநீர்

மூன்று மதில்எய்த மூவாச்சிலே
முதல்வர்க் கிடம்போலும் முகில்தோய்கொடி
தோன்றும் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே.

மறையிடுைலி கீதமொடு பாடுவன பூதமடி மருவி விரவார்
பறையிடுைலி பெருகநிகழ் நட்டம் அமர் பட்டிசர மேய பனிகூர்
பிறையிடுெடு மருவியதொர்சடையினிடையேற்றபுனல்தோற்றநிலையாம்
இறைவனடிமுறைமுறையின்ஏத்துமவர்தீத்தொழில்கள்இல்லர்மிகவே.

துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சகம் அற்றடி வாழ்த்த வந்த கூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செ ழுத்துமே.

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்
தேனை வழிதிறந்து ஏத்துவார்க்கு இடர்
ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே.

காத லாகிக் கசிந்து கண்ணீர்மல்கி
ஓதுவார் தம்மை நன்நெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது
நாதன் நாமம் நமச்சி வாயவே 205

நரகம் ஏழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயின் உருத்திரர்
விரைவி லேபுகு வித்திடும் என்பரால்
வரதன் நாமம் நமச்சி வாயவே

நம்பு வார்நமர் நாவில் நவிற்றினுல்
வம்பு நாண்மலர் வார்மது ஒப்பது
செம்பொனுர் திலகம் உலகுக் கெல்லாம்
நம்பன் நாமம் நமச்சி வாயவே.

மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும் ;
எண்ணினல் லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறும் கழுமல வளநகர்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே.

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையாள் அவளொடும் பெருந்தகை இருந்ததே.

சந்தமார் அகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினில் உமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையார் இணையடி என்மனத் துள்ளவே. 210

அட்டமா சித்திகள் அணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க்கு இல்லையாம் பாவமே.

இடரினுந் தளரினும் எனதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோ எமையாளுமாறு ஈவதொன் றெமக் கில்லையேல்
அதுவோ உனதின்னருள் ஆவடு துறையரனே !

வெப்பொடு விரவியோர் வினை வரினும்
அப்பவுன் அடியல்லால் அரற்று தென் நா
ஒப்புடை ஒருவனை உருவழிய
அப்படி அழலெழ விழித்தவனே (இதுவோ)

சடையா எனுமால் சரண்நீ எனுமால்
விடையா எனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுள் மெலிவே.

சிந்தா எனுமால் சிவனே எனுமால்
முந்தா எனுமால் முதல்வா எனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ இவள்ஏ சறவே. 215

செடிகொள் நோயாக்கையைம் பாம்பின்வாய்த்
தேரைவாய்ச் சிறுபறவை
கடிகொள்பூந் தேன்சுவைத்து இன்புறலாம்
என்று கருதினையே ;
முடிகளால் வானவர் முன்பணிந்து
அன்பரா யேத்து முக்கண்
அடிகளா ரூர்தொழு துய்யலாம்
மையல்கொண்டு அஞ்சல் நெஞ்சே !

வம்மின் அடியீர் நாண்மலர் இட்டுத் தொழு துய்ய
உம்அன்பி னெடெம் மன்புசெய் தீசன் உறை கோயில்
மும்மென்றிசை முரல் வண்டுகள் கெண்டித் திசைஎங்கும்
விம்மும் பொழில்சூழ் தண்வயல் வீழிம் மிழலையே.

பண்ணும் பதம் ஏழும்பல ஓசைத்தமிழ் அவையும்
உண்ணின்றதோர் சுவையும் உறு தாளத்தொலி பலவும்
மண்ணும் புனல் உயிரும்வரு காற்றும் சுடர் மூன்றும்
விண்ணும் முழு தானான் இடம் வீழிம்மிழ லையே.

வாசி தீரவே காசு நல்குவீர்—
மாசின் மிழலையீர் ஏசல் இல்லையே.
காமன் வேவவோர் தூமக் கண்ணினீர்
நாமம் மிழலையீர் சேமம் நல்குமே.
மங்கை பங்கினீர் துங்க மிழலையீர்
கங்கை முடியினீர் சங்கை தவிர்மினே.

வேயுறு தோளி பங்கன் விடம்உண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனால்,
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்
வெள்ளி சனி பாம்பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே 220

நீல மாமிடற் றால வாயிலான்
பால தாயினர் ஞாலம் ஆள்வரே.
ஞாலம் ஏழுமாம் ஆல வாயிலார்
சீலமே சொலீர் காலன் வீடவே
அம்பொன் ஆலவாய் நம்பனார் கழல்
நம்பி வாழ்பவர் துன்பம் வீடுமே.

விடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள் கடிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.

குற்றநீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ ; அருத்தமின்பம் என்றிவை
முற்றுநீ புகழ்ந்துமுன் உரைப்பதென் முகம்மனே.

ஆதியந்த மாயினும் ஆலவாயில் அண்ணலே
சோதியந்த மாயினும் சோதியுள்ளொர் சோதியாய்
கீதம் வந்த வாய்மையால் கிளர்தருக்கி னுர்க்கலால்
ஓதிவந்த வாய்மையால் உணர்ந்துரைக்க லாகுமே ?

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாயுமைப் பங்கன்திரு ஆலவாயன் திருநீறே. 225

வேதத்தில் உள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு ;
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு ; உண்மையில் உள்ளது நீறு ;
சீதப் புனல்வயல் சூழும்திரு ஆலவாயான் திருநீறே.

வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர் வேங்கை
கொம்பார் சோலைக் கோலவண் டியாழ்செய் குற்றுலம்
அம்பால் நெய்யோ டாடல் அமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள்.

செல்வம் மல்கும் செண்பக வேங்கை சென்றேறிக்
கொல்லை முல்லை மெல்லரும் பீனும் குற்றுலம்
வில்லின் ஒல்க மும்மதில் எய்து வினை போக
நல்கும் நம்பான் நன்னகர் போலும் நமரங்காள்.

போதும் பொன்னும் உந்தி யருவி புடைசூழக்
கூதன் மாரி நுண்துளி தூங்கும் குற்றுலம்
மூதூர் இலங்கை மூட்டிய கோனை முறை செய்த
நாதன் மேய நன்னகர் போலும் நமரங்காள்.

மருந்தவை மந்திரம் மறுமைநன் னெறியவை மற்று மெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற்கொன்றைபொன் சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலியுறை செல்வர் தாமே. 230

உண்ணமுலை உமையாளொடும் உடனுகிய ஒருவன்
பெண்ணுகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே

பெருகும்புனல் அண்ணாமலை பிறைசேர்கடல் நஞ்சை
பருகுந்தனை துணிவார்பொடி அணிவாரது பருகிக்
கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல் பரவி
உருகும்மனம் உடையார்தமக் குறுநோயடை யாவே.

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை ; கிளக்க வேண்டா ;
கோட்பா லனவும் வினையும் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கத் தக்கார்.

ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா ; சுடர்விட்டுளன் எங்கள் சோதி ;
மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்.
சாதுக்கண் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக !
ஆழ்க தீயதெல்லாம் ; அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே ! 235

## 5. சுந்தரம்

தோதிலா அமுதே அருள் பெருகு
கோலமே இமை யோர்தொழு கோவே
பாதி மாதொரு கூறுடை யானே,
பசுபதி பரமா பர மேட்டி
நீதிலா மலையே திரு வருள்சேர்
சேவகா திரு வாவடு துறையுள்
ஆதியே எனை அஞ்சலென் றருளாய்
யார் எனக்குற வமரர்கள் ஏறே ?

தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூரரெம் அடிகட்கே

உற்றனன் உற்றவர் தம்மை ஒழிந்துள்ளத் துள்பொருள்
பற்றினன் பற்றினன் ; பங்கயச் சேவடிக்கே செல்ல
அற்றனன் அற்றனன் ஆமாத்தூர் மேயான் அடியார்கட்கு ஆள்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவாமைக்கே

தக்கை தண்ணுமை தாளம்வீணை தகுணிச் சங்கிணை சல்லரி
கொக்கரைகுட குழலினேடிசை கூடிப் பாடிநின் றுடுவீர்
பக்கமே குயில் பாடும் சோலைப்பைஞ் ஞீலியேனென்று நிற்றிரால்
அக்கு மாமையும் பூண்டிரோ சொலும் ஆரணிய விடங்கரே,

தம்மையே புகழ்ந் திச்சை பேசினும்
சார்வினும் தொண்டர், தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள் !
இம்மையேதரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்.
அம்மையே சிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே ! 240

மிடுக்கில் லாதானை வீமனே விறல்
விஜயனேவில்லுக் கிவனென்று
கொடுக்கி லாதானைப் பாரியே என்று
கூறினும்கொடுப் பாரிலை ;
பொடிக்கொள் மேனியெம் புண்ணியன்புகல்
ஊரைப் பாடுமின் புலவீர்காள் ;
அடுக்குமேல் அம ருலகம் ஆள்வதற்கி
யாதும் ஐயுற வில்லையே.

வஞ்ச நெஞ்சனை மா சழக்கனைப்
பாவியை வழக் கில்லியைப்
பஞ்ச துட்டனைச் சாதுவே யென்று
பாடினும் கொடுப் பாரில்லை.
பொன்செய் செஞ்சடைப் புண்ணியன் புகல்
ஊரைப் பாடுமின் புலவீர்காள்.
நெஞ்சில் நோயறுத் துஞ்சுபோவதற்கி
யாதும் ஐயுற வில்லையே.

மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்பாதமே மனம் பாவித்தேன் ;
பெற்றலும்பிறந் தேனினிப்பிற வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்தும் சீர்க்கறை ஊரிற்பாண்டிக்கொடுமுடி
நற்றவா உனை நான்மறக்கினும் சொல்லுநா நமச்சி வாயவே !

இட்டனும்மடி ஏத்துவாரிகழ்ந் திட்டநாள் மறந்திட்டநாள்
கெட்ட நாளிவை என்றலாற்கரு தேன் ; கிளர்புனற் காவிரி
*வட்ட வாசிகை கொண்டடிதொழு தேத்து பாண்டிக்கொடுமுடி
நட்டவா வுனை நான்மறக்கினும், சொல்லுநா நமச்சி வாயவே.

---

* வட்டப்பூமாலை

பித்தாபிறை சூடிபெரு மானே அருளாளா
எத்தான்மற வாதே நினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூர் அருட் டுறையுள்.
அத்தாவுனக் காளாயினி அல்லேன்என லாமே. 245

ஊனாய் உயி ரானாய் உட லானாய் உல கானாய்
வானாய் நிலன் ஆனாய் கடல் ஆனாய் மலை யானாய்.
தேனார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூர் அருட் டுறையுள்
ஆனாயுனக் காளாயினி யல்லேன் என்லாமே

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதா யென்னுடைய
தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே.

அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்.
அதுவு நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வ ரடிகேள்
பிழைப்ப னாகிலும் திருவடிப் பிழையேன்.
வழுக்கி வீழினும் திருப்பெய ரல்லால்
மற்றுநான் அறியேன்; மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றி யூரெனும் ஊர்உறை வானே.

திருவுமெய்ப் பொருளுஞ் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்களென் றெண்ணி,
ஒருவரை மதியா துறாமைகள் செய்து
மூடியும் உறைப்பனாய்த் திரிவேன்;
முருகமர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் வாயினால் உன்னைப்
பரவிடும் அடியேன் படுதுயர் களையாய்
பாசுபதா பரஞ் சுடரே

மணிகெழு செவ்வாய் வெண்ணகைக் கரிய
வார்குழல் மாமயிற் சாயல்
அணிகெழு கொங்கை அங்கயற் கண்ணார்
அருநடம் ஆடல றாத

திணிபொழில் தழுவு திருமுல்லை வாயிற்
செல்வனே எல்லியும் பகலும்
பணியது செய்வேன் படுதுயர் களையாய்
பாசுபதா பரஞ் சுடரே! 250

இடையறியேன் தலையறியேன் எம்பெருமான் சரணமென்பேன்
[1]அடையுடையன் நம்மடியான் என்றவற்றைப் பாராதே
விடையுடையான் விடநாகன் வெண்ணீற்றன் புலியின்தோல்
உடையுடையான் எனையுடையான் உளோம்போகீர் என்றானே.

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீபோல் உள்ளே கனன்று முகத்தால் மிக வாடி
ஆளா யிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
[3]வாளாங் கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே.

ஒருமையே யல்லேன் எழுமையும் அடியேன்
அடியவர்க்கு அடியனும் ஆனேன்
உரிமையால் உரியேன் உள்ளமும் உருகும்
ஒண்மலர்ச் சேவடி காட்டாய்.
அருமையாம் புகழார்க்கு அருள்செயும் பாச்சி
லாச்சிரா மத்தெம் அடிகள்
பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யில்
இவரலா தில்லையோ பிரானார்

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்போலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிசார்ந்த அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

நரம்பினோ டெலும்பு கட்டி நசையினோடு இசைவொன் றில்லாக்
[3]குரம்பைவாய்க் குடியிருந்து [4]குலத்தினால் வாழ மாட்டேன்.
விரும்பிய கமழும் புன்னை மாதவித் தொகுதி யென்றும்
அரும்புவாய் மலரும் ஆரூர் அப்பனே அஞ்சினேனே. 255

---

[1]சரண் [2]சும்மா [3]உடல் [4]மேன்மையாக

மணமென மகிழ்வர் முன்னே; மக்கள்தாய் தந்தை சுற்றம்
பிணமெனச் சுடுவர் பேர்த்தே, பிறவியை வேண்டேன் நாயேன்;
[1]பணையிடைச் சோலைதோறும் பைம்பொழில் [2]விளாகத் தெங்கள்
அணைவினைக் கொடுக்கும் ஆரூர் அப்பனே அஞ்சி னேனே.

தோற்ற முண்டேல் மரணம் உண்டு துயரமனை வாழ்க்கை
மாற்றம் உண்டேல் வஞ்சம் உண்டு நெஞ்சமனத் தீரே.
நீற்றர் ஏற்றர் நீலகண்டர் நிறைபுனல்நீள் சடைமேல்
ஏற்றர் கோயில் எதிர்கொள் பாடி என்பதடை வோமே.

ஊனாய்உயிர் புகலாய் அக லிடமாய் முகில் பொழியும்
வானாய் வரு மதியாய் [3]விதி வருவானிடம் பொழிலின்
தேனாதரித் திசைவண்டினம் மிழற்றும் திருச் சுழியல்
நானாவிதம் நினைவார்தமை நலியார் நமன் தமரே

பண்ணின் தமி ழிசைபாடலின் பழவேய்முழ வதிரக்
கண்ணின் றெளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள் மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலும்திருக் கேதாரமெ னீரே.

பொதியேசுமந் துழல்வீர்பொதி அவமாவதும் அறியீர்
மதிமாந்திய வழியேசென்று குழிவீழ்வதும் வினையால்
கதிசூழ்கடல் இலங்கைக்கிறை மலங்கவரை அடர்த்துக்
கெதிபேறுசெய் திருந்தானிடம் கேதாரமெ னீரே. 260

எண்ணியிருந்து கிடந்து நடந்தும்
அண்ணல் எனாநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை ஆர்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னார்உறை பூவண மீதோ....

பொன்னார் மேனியனே புலித் தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே,
அன்னே யுன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.

கண்ணாய் ஏழுலகும் கருத்தாய் அருத்தமுமாய்
பண்ணா ரின்தமிழாய்ப் பர மாய பரஞ்சுடரே,
மண்ணார் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே,
அண்ணா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.

---

[1]மருதம் [2]இடம் [3]பிரமன்

நாளார் வந்தணுகி நலியாமுனம் நின்றனக்கே
ஆளா வந்தடைந்தேன் அடி யேனையும் ஏன்றுகொள் நீ
மாளா நாளருளும் மழ பாடியுள் மாணிக்கமே—
ஆளா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.

## 6. திருவிசைப்பா

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.
(திருமாளிகைத்தேவர்) 265

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கை ;
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளங்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே. (சேந்தனுர்)

புவனநா யகனே அகவுயிர்க் கமுதே
பூரணு *வாரணம் பொழியும்
பவளவாய் மணியே பணிசெய்வார்க்கு இரங்கும்
பசுபதி பன்னகா பரணு
அவனிஞா யிறுபோன்று அருள்புரிந்து, அடியேன்
அகத்திலு முகத்தலை மூதூர்த்
தவளமா மணிப்பூங் கோயிலும் அமர்ந்தாய்
தனியனேன் தனிமைநீத் தற்கே.

பண்ணிய தழல்காய் பாலளா நீர்போல்
பாவமுன் பறைந்துபால் அணைய
புண்ணியம் பின்சென்று அறிவினுக் கறியப்
புகுந்ததோர் யோகினிற் பொலிந்து,

---

*கடல்

நுண்ணியை எனினும், நம்பநின் பெருமை
நுன்னிடை ஒடுங்கநி வந்தென்
கண்ணினுண் மணியிற் கலந்தனை கங்கை
கொண்டசோ ளேச்சுரத் தானே (கருவூர்த்தேவர்)

பத்தியா யுணர்வோர் அருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா இருக்கும் தேவர்காள், இவர்தம்
திருவுரு இருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமா யதற்கோர்
வித்துமா யாரூர் ஆதியாய் வீதி
விடங்கராய் நடங்குலா வினரே ! (காடநம்பி)

திருப்பல்லாண்டு

குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி
எங்கும் குழாம் பெருகி,
விழவொலி விண்ணளவுஞ் சென்று விம்மி
மிகுதிரு ஆரூரின்
மழவிடை யார்க்கு வழிவழி யாளாய்
மணஞ்செய் குடிப் பிறந்த
பழவடி யாரொடுங் கூடியெம் மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே. 270

*மிண்டு மனத்தர் போமின்கள்; மெய்யடியார்கள்
விரைந்து வம்மின் !
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி ஈசற்கு
ஆட்செய்மின் குழாம்புகுந்து
அண்டங் கடந்த பொருள் அளவிலதோர்
ஆனந்த வெள்ளப் பொருள்
பண்டு மின்றும் என்றுமுள்ள பொருள்என்றே
பல்லாண்டு கூறுதுமே.

## 7. காரைக்காலம்மையார் ஞானம்

இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான் ; போற்றி
இறைவனே ஈண்டிறக்கஞ் செய்வான்—இறைவனே
எந்தாய் எனஇரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான்.

---

*குற்றமுள்ள

அருளே உலகெல்லாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தாலுல்—அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவ தெனக்கு.

எனக்கினிய எம்மானை ஈசனை யான் என்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன்—எனக்கவனைக்
கொண்டேன் பிரானுகக் கொள்வதுமே யின்புற்றேன்
உண்டே எனக்கரிய தொன்று.

ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தெழுந்தேன்
ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைந்தேன்—ஒன்றேகாண்
கங்கையான் திங்கட் கதிர்முடியான் பொங்கொளிசேர்
அங்கையாற் காளாம் அது. 275

அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்முன் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே அவன்.

அவனே இருசுடர்தீ ஆகாயம் ஆவான்
அவனே புவிபுனல்காற் றுவான்—அவனே
இயமானனுய் அட்ட மூர்த்தியுமாய் ஞான
வயனுகி நின்றுனும் வந்து.

பிரான் அவனை நோக்கும் பெருநெறியே பேணிப்
பிரானவன்றன் பேரருளே வேண்டிப்—பிரான்அவனை
எங்குற்றுன் என்பீர்காள் என்போல்வார் சிந்தையினும்
இங்குற்றுன் காண்பார்க் கெளிது.

கருத்தினுல் நீகருதிற் றெல்லாம் உடனே
திருத்தலாம் சிக்கெனநான் சொன்னேன்—பருத்தரங்க
வெள்ளநீர் ஏற்றுன் அடிக்கமலம் நீவிரும்பி
உள்ளமே எப்போதும் ஓது.

காலனையும் வென்றேம் கடுநரகங் கைகழன்றேம்
மேலை இருவினையும் வேரறுத்தோம்—கோல
*அரணுர் அவிந்தழிய வெந்தியம் பெய்தான்
சரணுர விந்தங்கள் சார்ந்து. 280

---

*திரிபுராதிகள்

## 8. க்ஷேத்திர வெண்பா

தொட்டுத் தடவித் துடிப்பொன்றும் காணாது
பெட்டப் பிணமென்று பேரிட்டுக்—கட்டி
எடுங்களத்தா என்னாமுன் ஏழைமட நெஞ்சே
நெடுங்களத்தான் பாதம் நினை. (ஐயடிகள் காடவர்கோன்)

கூறுமின் ஈசனைச் செய்ம்மின் குற்றேவல் ; குளிர்மின் கண்கள்
தேறுமின் சித்தம் தெளிமின் சிவனைச் செறுமின் செற்றம்;
ஆறுமின் வேட்கை ; அறுமின் அவலம் ; இவை நெறியாய்
ஏறுமின் வானத் திருமின் விருந்தாம் இமையவர்க்கே. (சேரமான்)

## 9. நக்கீரம்

உரையும் பொருளும் உடலும் உயிரும்
விரையும் மலரும்போல் விம்மிப்—புரையின்றி
சென்றவா றாங்குந் திருக்கயிலை எம்பெருமான்
நின்றவா றெங்கு நிறைந்து.

யானென்றுந் தானென் றிரண்டில்லை என்பதனை
யானென்றும் கொண்டிருப்பன் ஆனாலும்—தேனுண்(டு)
அளிகள்தாம் பாடும் அகன்கயிலை மேயான்
தெளிகொடான் மாயங்கள் செய்து.

ஒருவகைத் தேவரும் இருவகைத் திறமும்
மூவகைக் குணமும் நால்வகை வேதமும்
ஐவகைப் பூதமும் அறுவகை இரதமும்
எழுவகை ஓசையும் எண்வகை ஞானமும்
ஒன்பதின் வகையும் ஒண்மலர்ச் சிறப்பும்
பத்தின் வகையும் ஆகிய பரமனை,
இன்பனை நினைவோர்க் கென்னிடை யமுதனை
செம்பொனை மணியைத் தேனினைப் பாலினைத்
தஞ்சமென் றொழுகும் தன்னடி யார்தம்
நெஞ்சம் பிரியா நிமலனை நீடுயர்,
செந்தழல் பவளச் சேணுறு வரையனை
நினைந்திட ஆங்கே தோன்றும் நிமலனைத்
தாயாய் மன்னுயிர் தாங்குந் தந்தையைச்
சொல்லும் பொருளும் ஆகிய சோதியை,

தேவர் தேவனைத் திகழ்சிவ லோகனைப்
பாச நாசனைப் படரொளி யுருவனை
தோற்றம் நிலையீ றாகிய தொன்மையை
நீற்றிடைத் திகழு நித்தனை முத்தனை
ஈசனை இறைவனை ஈறில் பெருமையை
நேசனை நினைப்பவர் நெஞ்சத் துள்ளனை
ஈண்டிய சிறப்பின் இணையடிக்கீழ் நின்று
வேண்டும் அதுஇனி வேண்டுவன் யானே.

உன்னை ஒழிய ஒருவரையு நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில்வாழ் வே

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை.

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு
ஓவர இமைக்கும் சேண்விளங் கவிரொளி
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோள் முகந்த கமம்சூல் மாமழை
வாள்போழ் விசும்பின் வள்ளுறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து
இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள் பூந் தண்தார் புரளும் மார்பினன்
இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.

அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகாவென் றோதுவார் முன்.

# 10. திருவாக்கு

மொழியின் மறைமுதலே முன்னயனத் தேறே
கழிய வருபொருளே கண்ணே—தெழிய
கலாலயனே எங்கள் கணபதியே நின்னை
அலாதயலே சூழாதென் அன்பு. (அதிராவடிகள்)

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தம் கை. (கபிலர்)

மலர்ந்த மலர்தூவி மாமனத்தைக் கூப்பிப்
புலர்ந்தும் புலராத போதும்—கலந்திருந்து
கண்ணீர் அரும்பக் கசிவார்க்குக் காண்பெளியன்
தெண்ணீர் சடைக்கரந்த தே (கபிலர்)

பேச்சுப் பெருகுவதென் பெண்ஆண் அலியென்ற
பேச்சுக் கடந்த பெருவெளியைப்—பேச்சுக்
குரையானை ஊனுக் குயிரானை ஒன்றற்
குரியானை நன்னெஞ்சே யுற்று. (பரணர்)

கதியே அடியவர் எய்ப்பில் வைப்பாக் கருதிவைத்த
நிதியே நிமிர்புன் சடையமிர்தே நின்னை என்னுள் வைத்த
மதியே வளர்தில்லை யம்பலத்தாய் மகிழ் மாமலையாள்
பதியே பொறுத்தருளாய் கொடியேன் செய்த பல்பிழையே. 310
(நம்பியாண்டார்நம்பி)

நாவுக் கழகுனது நாமம் நயந்துரைக்கும்
பாவுக் கழகுனையே பாடுவது—தாவில்
கலைக்கழகு ஞானம்; கருவையா னேயென்
தலைக்கழகு நின்கமலத் தாள்

உருவாகி நிற்றி அருவாகி நிற்றி உயிரோ டெவர்க்கும் உறவாய்;
மருவாகி நிற்றி மலராகி நிற்றி மறையாகி நிற்றி, மறையின்
பொருளாகி நிற்றி, உனையான் அறிந்து புகழ்கின்ற வாறும் அறியேன்.
கருவா புரிக்குள் உறைதேவதேவ கதியே தெனக்கு மொழியே.
(வரகுணபாண்டியன்)

# 11. ஆழ்வார் பாசுரம்

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பலகோடி நூறுயிரம் ;
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணு நின்
செவ்வடி செவ்வி திருக்காப்பு !

அடியோமோடும் நின்னேடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய்நின் வலமார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு !
வடிவார் சோதி வலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு ;
படைபோர் புக்கு முழங்கும் அப்
பாஞ்ச ஜன்யமும் பல்லாண்டே !... (பெரியாழ்வார்)



பச்சைமா மலைபோல் மேனி பவளவாய், கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே, ஆயர் தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் ; அரங்கமா நகரு ளானே !

வேதநூல் பிராயம் நூறு மனிதர்தாம் புகுவ ரேனும்,
பாதியும்உறங்கிப் போகும் ; நின்றதில் பதினை யாண்டு
பேதைபாலகனதாகும் ; பிணிபசிமுப்புத்துன்பம்
ஆதலாற்பிறவிவேண்டேன்—அரங்கமாநகருளானே. 315

குடதிசைமுடியைவைத்துக் குணதிசைபாதம்நீட்டி,
வடதிசைபின்புகாட்டித் தென்றிசைஇலங்கைநோக்கி,
கடல்நிறக்கடவுள்எந்தை அரவணைதுயிலுமாகண்டு
உடலெனக்குருகுமாலோ என்செய்கேன் உலகத்திரே !

ஊரிலேன் காணியில்லை ; உறவுமற் றொருவரில்லை.
பாரில்நின் பாதமூலம் பற்றினேன் பரமமூர்த்தி ;
காரொளி வண்ணனே கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகண் அம்மா அரங்கமா நகருளானே.
(தொண்டர் அடிப்பொடி ஆழ்வார்)

ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங்க டச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே,

வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடமலைமேல்
கானாறாய்ப் பாயுங் கருத்துடையே னாவேனே

தருதுயரந் தடாயேல்உன் சரணல்லாற் சரணில்லை ;
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் விற்றுவக்கோட் டம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே யழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே. 320

கண்டா ரிகழ்வனவே காதலன்றான் செய்திடினும்
கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்போல்,
விண்டோய் மதிள்புடைசூழ் விற்றுவக்கோட் டம்மாநீ
கொண்டாளா யாகிலும்உன் குரைகழலே கூறுவனே.

வாளால் அறுத்துச் சுடினும், மருத்துவன்பால்
மாளாத காதல்நோ யாளன்போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும், விற்றுவக்கோட் டம்மாநீ
ஆளா வுனதருளே பார்ப்பன் அடியேனே.

செந்தழலே வந்தழலைச் செய்திடினுஞ் செங்கமலம்
அந்தரஞ்சேர் வெங்கதிரோர்க் கல்லால் அலராவால்;
வெந்துயர்வீட் டாவிடினும் விற்றுவக்கோட் டம்மாவுன்
அந்தமில்சீர்க் கல்லால் அகங்குழைய மாட்டேனே.

எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் ; மற்றவைபோல்
மெய்த்துயர்வீட் டாவிடினும் விற்றுவக்கோட் டம்மாஎன்
சித்தமிக வுன்பாலே வைப்பன் அடியேனே.

வெங்கண்திண் களிறடர்த்தாய் விற்றுவக்கோட் டம்மானே,
எங்குப்போய் உய்கேன்உன் னிணையடியே அடையல்லால்
எங்கும்போய்க் கரைகாணாது எறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே. 325

(குலசேகராழ்வார்)

தன்னுளே திரைத்தெழுந் தரங்கவெண் தடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந்து அடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்திறந்து நிற்பவுந் திரிபவும்
நின்னுளே யடங்குகின்ற நீர்மைநின்கண் நின்றதே.

ஊனில்மேய ஆவிநீ ; உறக்கமோ டுணர்ச்சிநீ
ஆனில்மேய ஐந்தும்நீ அவற்றுள்நின்ற தூய்மைநீ
வானினோடு மண்ணும்நீ வளங்கடற் பயனும்நீ
யானும்நீ யதன்றியெம் பிரானும்நீ யிராமனே

அத்தனாகி அன்னையாகி ஆளும்எம்பி ரானுமாய்
ஒத்தொவ்வாத பல்பிறப் பொழித்துநம்மை யாட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்துநம்முள் மேவினார்
எத்தினால் இடர்க்கடல் கிடைத்தியேழை நெஞ்சமே
(திருமழிசைஆழ்வார்)

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்,
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்
சீர்மல்கு மாய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்,
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

ஓங்கி யுளகளந்த வுத்தமன் பேர்பாடி,
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்,
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகளப்
பூங்குவளைப் போதிற் பொறிவண்டு கண்படுப்ப,
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளற் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய் !

அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி !
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறம்போற்றி !
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி !
கன்று குணிலா யெறிந்தாய் கழல்போற்றி !
குன்று குடையா யெடுத்தாய் குணம்போற்றி !
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி !
என்றென்றும் உன்சே வகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்றியாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய் !

சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்திற் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது ;

இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும், உன்தன்னோடு
உற்றோமே யாவோம் ; உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்

கூட்டிலிருந்துகிளியெப்போதும்கோவிந்தாகோவிந்தாஎன்றழைக்கும்
ஊட்டக் கொடாது செறுப்பனாகில் உலகளந் தானென் றுயரக்கூவும்
நாட்டில் தலைப்பழி யெய்தி யுங்கள் நன்மை யிழந்து தலையிடாதே
சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதிக்கென்னை
யுய்த்திடுமின் !
என்புருகி இனவேல் நெடுங்கண்கள் இமைபொருந்தா பலநாளும்
துன்பக் கடல்புக்கு வைகுந்த னென்பதோர் தோணி பெறா துழல்
கின்றேன் ;
அன்புடை யாரைப் பிரிவுறுநோ யதுநீயும் அறிதி குயிலே
பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப் புண்ணிய னைவரக் கூவாய்
335

ஆரே யுலகத்து ஆற்றுவார் ஆயர் பாடி கவர்ந்துண்ணும்
காரே றுழக்க வுழக்குண்டு தளர்ந்து முறிந்து கிடப்பேனை,
ஆரா வமுத மனையான்றன் அமுதவாயி லூறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே பருக்கி யிளைப்பை நீக்கீரே.

பாடுங் குயில்காள் ஈதென்ன பாடல் நல் வேங்கட
நாடர் நமக்கொரு வாழ்வுதந் தால்வந்து பாடுமின்
ஆடும் கருளக் கொடியுடையார்வந் தருள்செய்து
கூடுவா ராயிடில் கூவிநும் பாட்டுக்கள் கேட்டுமே!

முல்லைப் பிராட்டி நீயுன் முறுவல்கள் கொண்டெம்மை
அல்லல் விளையேல் ஆழிநங்காய், உன்னடைக்கலம் ;
கொல்லை யரக்கியை மூக்கரிந் திட்ட குமரனார்
சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே.

வாரண மாயிரஞ் சூழ வலஞ்செய்து
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புரமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழிநான்

மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழிநான் (ஆண்டாள்) 340

காயாமலர் நிறவா, கருமுகில் போலுருவா,
கானகமா மடுவில் காளிய னுச்சியிலே
தூய நடம் பயிலும் சுந்தர என்சிறுவா,
துங்க மதக்கரியின் கொம்பு பறித்தவனே,
ஆய மறிந்துபொரு வான்எதிர் வந்தமல்லே
அந்தர மின்றியழித் தாடிய தாளிணையாய்
ஆயு வெனக்கொருகால் ஆடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே ஆடுக ஆடுகவே !

செங்கமலப் பூவில் தேனுண்ணும் வண்டேபோல்
பங்கிகள் வந்துன் பவளவாய் மொய்ப்ப
சங்குவில் வாள்தண்டு சக்கர மேந்திய
அங்கைகளா லேவந்து அச்சோவச்சோ
ஆரத் தழுவாய் வந்து அச்சோவச்சோ !

வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க
மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தேபோல்
சொட்டுச்சொட் டென்னத் துளிக்கத் துளிக்க என்
குட்டன்வந் தென்னைப் புறம்புல்குவான்
கோவிந்தன் என்னைப் புறம்புல்குவான்.

பூணித் தொழுவினிற் புக்குப் புழுதியளைந்த பொன்மேனி
காணப் பெரிதும் உகப்பன் ஆகிலும் கண்டார் பழிப்பர்
நாணெத்தனையு மிலாதாய் நப்பின்னை காணிற் சிரிக்கும்
மாணிக்கமே யென்மணியே மஞ்சன மாடநீ வாராய் ! 345

பல்லாயிரவர் இவ்வூரிற் பிள்ளைகள் தீமைகள் செய்வார்
எல்லாம் உன்மேலன்றிப் போகாது எம்பிரான் நீஇங்கேவாராய்
நல்லார்கள் வெள்ளறை நின்றாய் ஞானச் சுடரேவுன்மேனி
சொல்லார வாழ்த்திநின் றேத்திச் சொப்படக் காப்பிடவாராய்

பாலைக் கறந்து அடுப்பேற வைத்துப்
பல்வளை யாளென் மகளிருப்ப
மேலை யகத்தே நெருப்பு வேண்டிச்சென்று
இறைப்பொழுது அங்கே பேசிநின்றேன்.
சாளக்கி ராம முடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்—
ஆலைக் கரும்பின் மொழியனைய
அசோதை நங்காயுன் மகனைக்கூவாய் !

கேசவனே இங்கே போதராயே
கில்லே னென்னாதிங்கே போதராயே
நேச மிலாதார் அகத்திருந்து
நீவிளை யாடாதே போதராயே
தூசனம் சொல்லும் தொழுத்தை மாரும்
தொண்டரும் நின்ற விடத்தில் நின்று
தாய்சொல்லுக் கொள்வது தன்மம் கண்டாய்
தாமோத ராஇங்கே போதராயே ! 350

புவியுள் நான்கண்டதோ ரற்புதம்கேளீர்
பூணிமேய்க்கும் இளங்கோவலர் கூட்டத்து
அவையுள் நாகத்தணை யான்குழலூத
அமரலோகத் தளவும் சென்றிசைப்ப
அவியுணா மறந்து வானவ ரெல்லாம்
ஆயர்பாடி நிரையப் புகுந்திண்டி
செவியுணாவின் சுவைகொண்டு மகிழ்ந்து
கோவிந்தனைத் தொடர்ந்து என்றும் விடாரே !

சோர்வினாற் பொருள் வைத்ததுண் டாகில்
சொல்லு சொல்லென்று சுற்று மிருந்து,
ஆர்வி னவிலும் வாய்திற வாதே
அந்தக் காலம் அடைவதன் முன்னம்
மார்வ மென்பதோர் கோயில் அமைத்து,
மாதவ னெனுந் தெய்வத்தை நாட்டி,
ஆர்வ மென்பதோர் பூவிட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலு மாமே

உனக்குப் பணிசெய் திருக்குந் தவமுடை யேனினிப் போயொருவன்
தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கைநின் சாயை யழிவு கண்டாய்
புனத்தினைக் கிள்ளிப் புதுவவி காட்டியுன் பொன்னடி வாழ்க வென்று
இனக்குறவர் புதியதுண்ணும் எழில்மா லிருஞ்சோலை யெந்தாய் !

பொன்னைக்கொண்டுரைகல்மீதே நிறமெழ வுரைத்தாற் போல [டேன்;
உன்னைக்கொண்டென் நாவகம்பால் மாற்றின்றி யுரைத்துக்கொண்
உன்னைக்கொண் டென்னுள் வைத்தேன் என்னையும் உன்னிலிட்டேன் ;
என்னப்பா என்னிருடீகேசா என்னுயிர்க் காவலனே (பெரியாழ்வார்)

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துய ரிடும்பையிற் பிறந்து
கூடினேன் கூடி யிளையவர் தம்மோடு
அவர்தருங் கலவியே கருதி

ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதந் தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம். 355

குலந்தரும் செல்வந் தந்திடும்
அடியார் படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் ; நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் ;
பெற்றதாயினும் ஆயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்

பொறுத்தேன் புன்சொல்லை நெஞ்சில்; பொருளின்ப மெனவிரண்டும்
இறுத்தேன்; ஐம்புலன்களுக் கிடனாயின வாயிலொட்டி
அறுத்தேன்; ஆர்வச்செற்றமவை தம்மை மனத்தகற்றி
வெறுத்தேன் நின்னடைந்தேன் ; திருவிண்ணகர் மேவியவா !

பாடோமோ எந்தை பெருமானைப் பாடிநின்று
ஆடோமோ ஆயிரம் பேரானைப் பேர்நினைந்து,
சூடோமோ சூடுந் துழாயலங்கல் ; சூடிநாம்
கூடோமோ கூடக் குறிப்பாகில் நன்னெஞ்சே ! (திருமங்கையாழ்வார்)

**வை**யந் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று.

குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்
இன்று முதலாக என்நெஞ்சே—என்றும்
புறனுரையே யாயினும் பொன்னாழிக் கையான்
திறனுரையே சிந்தித் திரு. 360

தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்—தமருகந்து
எவ்வண்ணஞ் சிந்தித் திமையா திருப்பாரே
அவ்வண்ண மாழியா னாம்.

உணர்வாரார் உன்பெருமை ஊழிதோ றூழி
உணர்வாரார் உன்னுருவந் தன்னை—உணர்வாரார்
விண்ணகத்தாய் மண்ணகத்தாய் வேங்கடத்தாய் நால்வேதப்
பண்ணகத்தாய் நீகிடந்த பால்.

நாடிலும் நின்னடியே நாடுவேன் நாள்தோறும்
பாடிலும் நின்புகழே பாடுவேன்—சூடிலும்
பொன்னாழி யேந்தினான் பொன்னடியே சூடுவேற்கு
என்னாகில் என்னே யெனக்கு

சொல்லுந் தனையுந் தொழுமின் விழுமுடம்பு
செல்லுந் தனையுந் திருமாலை—நல்லிதழ்த்
தாமத்தால், வேள்வியால், தந்திரத்தால், மந்திரத்தால்
நாமத்தால் ஏத்துதிரேல் நன்று.

உளன்கண்டாய் நன்னெஞ்சே உத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவா ருள்ளத்து—உளன்கண்டாய்
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்தி னுள்ளானும்
உள்ளத்தி னுள்ளானென் றோர். (பொய்கையாழ்வார்) 365

அறிந்தைந்தும் உள்ளடக்கி ஆய்மலர்கொண் டார்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே—அறிந்தவன்றன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
காரோத வண்ணன் கழல்.

ஒருருவ னல்லை ; ஒளியுருவம் நின்னுருவம் ;
ஈருருவ னென்பர் இருநிலத்தோர்—ஒருருவம்
ஆதியாம் வண்ணம் அறிந்தா ரவர்கண்டீர்
நீதியால் மண்காப்பார் நின்று. (பூதத்தாழ்வார்)

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமுங் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் ; புரிசங்கங் கைக்கண்டேன்.
என்னாழி வண்ணன்பா லின்று.

தானே தனக்குவமன் தன்னுருவே யெவ்வுருவும்
தானே தவவுருவுந் தாரகையும்—தானே
எரிசுடரும் மால்வரையும் எண்திசையும் அண்டத்து
இருசுடரு மாய இறை.

இறையாய் நிலனாகி யெண்திசையுந் தானாய்
மறையாய் மறைப்பொருளாய் வானாய்—பிறைவாய்ந்த
வெள்ளத் தருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான்
உள்ளத்தி னுள்ளே யுளன். (பெயாழ்வார்) 370

கொண்டல் வண்ணனைக் கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன்என் னுள்ளங் கவர்ந்தானை ;
அண்டர் கோன்அணி யரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள்மற் றொன்றினைக் காணாவே. (திருப்பாணாழ்வார்)

அவரவர் தமதமது அறிவறி வகைவகை
அவரவர் இறையவர் எனஅடி யடைவர்கள் ;
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடையநின் றனரே.

உளனெனில் உளன்அவ னுருவம்இவ் வுருவுகள்
உளனல னெனில்அவ னருவம் இவ் வருவுகள்
உளனென இலனென இவைகுண முடைமையில்
உளனிரு தகைமையொடு ஒழிவிலன் பரந்தே,

மின்னின் நிலையில மன்னுயிர் யாக்கைகள்
என்னு மிடத்து இறை உன்னுமின் நீரே.
இல்லதும் உள்ளதும் அல்லதும் அவனுரு
எல்லையில் அந்நலம் புல்குபற் றற்றே. 375
அற்றது பற்றெனில் உற்றது வீடு ; உயிர்
செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே.

இவையும் அவையும் உவையும் இவரும் அவரும் உவரும்
எவையும் யவரும் தன்னுள்ளே ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவையுள் தனிமுதல் எம்மான் கண்ணபிரான் என்னமுதம்
சுவையன் திருவின் மணாளன் என்னுடைச் சூழலு ளானே.

நெஞ்சமே நல்லை நல்லை யுனைப்பெற்றால்,
என்செய்யோம் ? இனி யென்ன குறைவினம் ?
மைந்தனை மலராள் மண வாளனைத்
துஞ்சும் போதும் விடாது தொடர்கண்டாய்.

ஊனில்வா ழுயிரே நல்லைபோ உன்னைப்பெற்று
வானுளார் பெருமான் மதுசூதன் என் அம்மான்
தானும் யானு மெல்லாம் தன்னுளே கலந்தொழிந்தோம்
தேனும் பாலும் நெய்யும்கன்னலும் அமுதுமொத்தே

எனதாவி யுட்கலந்த பெருநல் லுதவிக் கைம்மாறு,
எனதாவி தந்தொழிந்தேன் ; இனிமீள்வ தென்பதுண்டே ;
எனதாவி யாவியும்நீ ; பொழிலேழு முண்ட எந்தாய்,
எனதாவியார் யானார் ? தந்தநீகொண் டாக்கினையே. 380

ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்
காணலு மாகான் உளனல்லன், இல்லை யல்லன்.
பேணுங்கால் பேணும் உருவாகும் அல்லனுமாம்.
கோணை பெரிதுடைத்தெம் பெருமானைக் கூறுதலே.

முடியாத தென்னெனக்கேல் இனிமுழு ஏழுலகும் உண்டான் உகந்துவந்து
அடியேனுட் புகுந்தான் அகல்வானு மல்லனினி ;
செடியார் நோய்களெலாந் துறந்தெமர் கீழ்மேலெழு பிறப்பும்
விடியா வெந்நரகத்து என்றும் சேர்தல் மாறினரே.

யானே யென்னை யறியகிலாதே
யானே என்தனதே யென்றிருந்தேன் ;
யானேநீ என்னுடைமையும் நீயே ;
வானே யேத்துமெம் வானவரேறே.

ஒளிமணி வண்ண னென்கோ ஒருவனென் றேத்த நின்ற
நளிர்மதிச் சடையனென்கோ நான்முகக் கடவுளென்கோ
அளிமகிழ்ந் துலக மெல்லாம் படைத்தவை யேத்த நின்ற
களிமலர்த் துளவ னெம்மான் கண்ணனை மாய னையே

யாவையும் யவரும் தானய் அவரவர் சமயந் தோறும்
தோய்விலன் புலனைந் துக்கும் சொலப்படான் உணர்வின்மூர்த்தி
ஆவிசேர் உயிரி னுள்ளான் யாதுமோர் பற்றி லாத
பாவனை யதனைக் கூடில் அவனையுங் கூட லாமே. 385

அளிக்கும் பரமனைக் கண்ணனை ஆழிப் பிரான் தன்னைத்
துளிக்கும் நறுங்கண்ணித் தூமணி வண்ணன் எம்மான்தன்னை
ஒளிக்கொண்ட சோதியை உள்ளத்துக் கொள்ளு மவர்கண்டீர்
சலிப்பின்றி யாண்டு எம்மைச் சன்மசன் மாந்தரம் காப்பரே

குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ்இழிந்து எத்தனை
நலந்தா னிலாத சண்டாள சண்டாளர்க ளாகிலும்,
வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணற்காளென்றுஉள்
கலந்தார் அடியார்தம் அடியார்எம் மடிகளே.

வம்மின் புலவீர்நும் மெய்வருத்திக் கைசெய்து உய்ம்மினோ
இம்மன் னுலகிற் செல்வர் இப்போதில்லை ; நோக்கினோம் ;
நும்இன்கவிகொண்டு நும் நும் இட்ட தெய்வ மேத்தினல்
செம்மின் சுடர்முடிஎன் திருமாலுக்குச் சேருமே

ஏகமூர்த்தி யிருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி
ஆகி ஐந்து பூதமாய், இரண்டு சுடராய் அருவாகி
நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே உன்
ஆகமுற்று மகத்தடக்கி ஆவியல்லல் மாய்த்ததே.

ஒன்றியதிங்களைக் காட்டி ஒளிமணி வண்ணனே யென்னும்
நின்றகுன் றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும்
நன்றுபெய்யும் மழைகாணில் நாரணன் வந்தானென் றுலும்
என்றின மையல்கள் செய்தார் என்னுடைக் கோமளத்தையே 390

கோமளவான் கன்றைப் புல்கிக் கோவிந்தன் மேய்த்தன வென்னும்
போமிள நாகத்தின் பின்போய் அவன்கிடக்கை யீதென்னும் ;
ஆமள வொன்று மறியேன் அருவினை யாட்டியேன் பெற்ற
கோமள வல்லியை மாயோன் மால்செய்து செய்கின்ற கூத்தே

திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்
உருவுடை வண்ணங்கள் காணில் உலகளந்தா னென்றுதுள்ளும்
கருவுடைத் தேவில்க ளெல்லாம் கடல்வண்ணன் கோயிலே யென்னும்
வெருவிலும் வீழ்விலும் ஓவாக் கண்ணன் கழல்கள் விரும்புமே

விரும்பிப் பகவரைக் காணில் வியலிட முண்டானே யென்னும்
கரும்பெரு மேகங்கள் காணில், கண்ணனென் றேறப் பறக்கும்
பெரும்புல ஆநிரை காணில் பிரானுள னென்றுபின் செல்லும்
அரும்பெறல் பெண்ணினை மாயோன் அலற்றி அயர்ப்பிக்கின் றானே.

ஊரெல்லாம் துஞ்சி உலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாம் தேறியோர் நீளிரவாய் நீண்டதால்
பாரெல்லாம் உண்டநம் பாம்பணையான் வாரானால்
ஆர்எல்லே வல்வினையேன் ஆவிகாப் பாரினியே ?

நீராய் நிலனாய் தியாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்க ளிரண்டாய்ச் சிவனாய் அயனானாய்.
கூரா ராழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால்
வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே. 395

அறிவிலேனுக் கருளாய் அறிவா யுயிரானாய்
வெறிகொள் சோதிமூர்த்தி அடியேன் நெடுமாலே,
கிறிசெய் தென்னைப் புறத்திட்டு இன்னங் கெடுப்பாயோ
பிறிதொன் றறியா அடியேன் ஆவி திகைக்கவே.

வந்தாய் போலே வாராதாய், வாரா தாய்போல் வருவானே,
செந்தா மரைக்கண் செங்கனிவாய் நாள்தோ ளமுதே யெனதுயிரே
சிந்தா மணிகள் பகரல்லைப் பகல்செய் திருவேங் கடத்தானே
அந்தோ அடியேன் உன்பாதம் அகல கில்லேன் இறையுமே

பாசங்கள் நீக்கி யென்னையுனக்கே அறக்கொண் டிட்டுநீ
வாச மலர்த்தண் துழாய்முடி மாயவனே அருளாய்
காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய் பின்னும்நீ
மாயங்கள் செய்துவைத்தி இவையென்ன மயக்குகளே !

நன்றும் ஞானம் கடந்து போய் நல்லிந் திரிய மெல்லாமீர்த்து
ஒன்றுய்க் கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து,
சென்றுங் இன்ப துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்றால்
அன்றே அப்போ தேவீடு அதுவே வீடு வீடாமே

யானும் தானு யொழிந்தானை யாதும் யவர்க்கும் முன்னேனை,
தானும் சிவனும் பிரமனு மாகிப் பணைத்த தனிமுதலை
தேனும் பாலுங் கன்னலும் அமுது மாகித் தித்தித்தென்
ஊனில் உயிரில் உணர் வினில் நின்ற ஒன்றை யுணர்ந்தேனே. 400

கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணனே

பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த ; நமனுக்கிங்கு யாதொன்று மில்லை ;
கலியும் கெடும்கண்டு கொண்மின்;கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்திசை பாடி யாடியுழிதரக் கண்டோம் !

கண்டோம் கண்டோம் கண்டோம் ! கண்ணுக் கினியன கண்டோம்
தொண்டீர் எல்லீரும் வாரீர் தொழுது தொழுது நின் றார்த்தும்.
வண்டார் தண்ணந் துழாயான் மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்தான் பாடிநின் றாடிப் பரந்து திரிகின் றனவே !

திரியும் கலியும் நீங்கித் தேவர்கள் தாமும் புகுந்து,
பெரிய கிதயுகம் பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருக,
கரியமுகில் வண்ண னெம்மான் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்
இரியப் புகுந்து இசைபாடி எங்கும் இடங்கொண் டனவே ! 404

(நம்மாழ்வார்)

## 12. பட்டினத்தார் ஞானம்

ஊட்டுவிப் பானும், உறங்குவிப் பானும் இங்கு ஒன்றோ டொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்ற வினை
காட்டுவிப் பானும் இருவினைப் பாசக் கயிற்றின் வழி
ஆட்டுவிப் பானும் ஒருவனுண்டே தில்லை யம்பலத்தே ! 405

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப்பல் பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த ; எதிர்நிற்க ஈசன் இருக்கையிலே
மண்ணுண்டு போகு தையோ கெடுவீர் இந்த மானிடமே !

வினைப் போகமே யொரு தேகங் கண்டாய் ; வினைதான் ஒழிந்தால்
தினைப்போ தளவு நில்லாது கண்டாய் ; சிவபாத நினை ;
நினைப் போரை மேவு ; நினையாரை நீங்(கு) ; இந் நெறியி னின்றால்
உனைப்போல் ஒருவர் உண்டோ மனமே யெனக் குற்றவரே !

ஒன்றென் றிரு ; தெய்வம் உண்டென்றிரு ; உயர் செல்வ மெலாம்
அன்றென் றிரு ; பசித்தோர் முகம்பார் ; நல்லறமு நட்பும்
நன்றென்றிரு ; நடு நீங்காமலே நமக் கிட்டபடி
யென்றென் றிரு ; மனமே யுனக்கேயுப தேசமிதே !

நாட்டமென் றேயிரு ; சற்குரு பாதத்தை நம்பு ; பொம்மல்
ஆட்டமென் றேயிரு பொல்லா வுடலை ; அடர்ந்த சந்தைக்
கூட்டமென் றேயிரு சுற்றத்தை ; வாழ்வைக் குடங்கவிழ்நீர்
ஓட்டமென் றேயிரு ; நெஞ்சே யுனக்குப தேசமிதே !

நீற்றைப் புனைந்தென்ன ? நீராடப் போயென்ன ? நீ மனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை ; மாமறை நூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன கண்டாய் ?
ஆற்றிற் கிடந்துந் துறையறி யாமல் அலைகின்றையே ! 410

நானெத்தனை புத்தி சொன்னாலுங் கேட்டிலை நன்னெஞ்சமே !
ஏனிப் படிகெட் டுழல்கின் றாய்?இனி யேது மிலா
வானத்தின் மீனுக்கு வன்தூண்டி லிட்ட வகையது போற்
போனத்தை மீள நினைக்கின்றனை-யென்ன புத்தியிதே !

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த ஐம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள்செய்து,
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தை யிட்டுப்
புஞ்சக் களைபறித்தேன் வளர்த்தேன் சிவ போகத்தையே !

வெட்டாத சக்கரம், பேசாத மந்திரம், வேறொருவர்க்(கு)
எட்டாத புட்பம் ; இறையாத தீர்த்தம் ; இனிமு டிந்து
கட்டாத லிங்கங் கருதாத நெஞ்சங் கருத்தி னுள்ளே
முட்டாத பூஜை யன்றோ குருநாதன் மொழிந்ததுவே !

அடியார் உறவும், அரன்பூசை நேயமும், அன்பு மன்றிப்
படிமீதில் வேறு பயனுளதோ ? பங்கயன் வகுத்த
குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள்
தடியால் அடியுண்ட வாறொக்கு மென்றினஞ் சார்ந்திலரே !

உளியிட்ட கல்லையும், ஒப்பிட்ட சாந்தையும், ஊத்தையறப்
புளியிட்ட செம்பையும் போற்றுகிலேன் ; உயிர் பொன்னெனவே
ஒளியிட்ட தாளிரண் டுள்ளே யிருத்துவ துண்மை யென்று 415
வெளியிட் டடைத்து வைத்தேன் ; இனிமேல் ஒன்றும் வேண்டிலனே!

எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்கு மொன்றாய்,
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூட ரெல்லாங்
கட்டிச் சுருட்டித்தம் கக்கத்தில் வைப்பர் ; கருத்தில் வையார் ;
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே !

அட்டாங்க யோகமும், ஆதாரம் ஆறும், அவத்தை ஐந்தும்,
விட்டேறிப் போன வெளிதனி லேவியப் பொன்று கண்டேன் :
வட்டாகிச் செம்மதிப் பாலூறலுண்டு, மகிழ்ந்திருக்க,
எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே !

சிற்றம் பலமுஞ் சிவனும் அருகிருக்க,
வெற்றம் பலந்தேடி விட்டோமே—நித்தம்
பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சம்
கறந்தி டத்தை நாடுதே கண் !

ஆவியொடு காய மழிந்தாலு மேதினியிற்
பாவியென்று நாமம் படையாதே—மேவியசீர்
வித்தாரமும் கடம்பும் வேண்டா, மடநெஞ்சே,
செத்தாரைப் போலே திரி.

இருப்பது பொய் ; போவதுமெய் ; யென்றெண்ணி, நெஞ்சே
ஒருத்தருக்குந் திங்கினையுன் னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க, நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான் !

எத்தொழிலைச் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும்,
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமன நீர்க்குடத்தே தான் !

பொல்லாதவன், நெறி நில்லாதவன் ; ஐம்புலன்கள் தம்மை
வெல்லாதவன் ; கல்வி கல்லாதவன் ; மெய் யடியவர்பாற்
செல்லாதவன் ; உண்மை சொல்லாதவன் ; நின் திருவடிக்கன்
பில்லாதவன் மண்ணி லேன்பிறந் தேன் கச்சி யேகம்பனே ?

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி
நில்லாப் பிழையு நினையாப் பிழையு, நின் ஐந்தெழுத்தைச்
சொல்லாப் பிழையுந் துதியாப் பிழையுந் தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி யேகம்பனே !

ஓயாமற் பொய்சொல்வர் ; நல்லோரை நிந்திப்பர் ; உற்றுப்பெற்ற
தாயாரை வைவர் ; சதியா யிரஞ் செய்வர் சாத்திரங்கள்
ஆயார் ; பிறர்க்குப காரஞ் செய்யார் ; தம்மை யண்டினர்க்(கு)ஒன்(று)
ஈயார், இருந்தென்ன, போயென்னகாண் கச்சி யேகம்பனே !

கல்லார் சிவகதை ; நல்லோர் தமக்குக் கனவிலு மெய்.
சொல்லார் ; பசித்தவர்க் கன்னங் கொடார் ; குரு சொன்னபடி
நில்லார் ; அறத்தை நினையார் ; நின்னுமம் நினைவிற் சற்றும்
இல்லார், இருந்தென், இறந்தென் புகல் கச்சி யேகம்பனே ! 425

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனையால் வருந் தோடம், செய்த
பொல்லாத தீவினை, பார்வையிற் பாவங்கள், புண்ணிய நூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் திங்குகள், ஆயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி யேகம்பனே !

கடுஞ்சொல்லின் வம்பரை யீனரைக் குண்டரைக் காமுகரைக்
கொடும்பவ மேசெயு நிர்மூடர் தம்மைக் குவலயத்துள்
நெடும்பனை போல வளர்ந்து,நல் லோர்தம் நெறியறியா
இடும்பரை ஏன் வகுத்தா யிறைவா கச்சி யேகம்பனே ?

பொருளுடை யோரைச் செயலினும், வீரரைப் போர்க்களத்துந்
தெருளுடை யோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோல்
அருளுடை யோரைத் தவத்திற் குணத்தில், அருளில், அன்பில்
இருளறு சொல்லினுங் காணத்தகும் கச்சி யேகம்பனே !

ஓடாமற் பாழுக் குழையாமல், ஓர முரைப்பவர்பாற்
கூடாமல், நல்லவர் கூட்டம் விடாமல், வெங்கோப நெஞ்சில்
நாடாமல், நன்மை வழுவாமல், இன்றைக்கு நாளைக்கென்று
தேடாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே !

பாராமல், ஏற்பவர்க் கில்லையென் னுமற் பழுதுசொல்லி
வாராமற் பாவங்கள் வந்தணு காமல், மனமயர்ந்து
பேராமற் சேவை பிரியாமல், அன்பு பெருதவரைச்
சேராமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே ! 430

கொல்லாமற் கொன்றதைத் தின்னுமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவரோ டிணங்காமற் கனவிலும் பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமல், தோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே !

முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு முடிவிலொரு
பிடிசாம்ப லாய் வெந்து மண்ணுவ துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே !

பிறவா திருக்க வரந்தரல் வேண்டும் ; பிறந்து விட்டால்
இறவா திருக்க மருந் துண்டு காண் ; இது எப்படியோ
அறமார் புகழ்த்தில்லை யம்பல வாணர் அடிக்கமலம்
மறவா திரு மனமே ; யதுகாண்நன் மருந்துனக்கே !

சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்தது மற்று, நினையாமையு மற்று, நிர்ச்சிந்தனுய்த்
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலி லென்றிருப்பேன் அத்தனே கயிலாயத்தனே ?

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமி யான்
செய்கின்ற பூசையெவ் வாறு கொள்வாய் வினை தீர்த்தவனே ! 435

நிருர்த்த மேனி யுரோமஞ் சிலிர்த்துள நெக்குநெக்குச்
சேருய்க் கசிந்து கசிந்தே யுருகிநின் சீரடிக்கே
மாருத் தியானமுற் ருனந்த மேற்கொண்டு மார்பிற் கண்ணீர்
ஆருய்ப் பெருகக் கிடப்ப தென்ருேகயிலா யத்தனே !

வேதத்தி னுட்பொருள் மண்ணுசை, மங்கையை, விட்டுவிடப்
போதித்த வன்மொழி கேட்டிலேயோ செய்த புண்ணியத்தால்,
ஆதித்தன் சந்திரன் போல வெளிச்சம தாம்பொழுது
காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே !

அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மியிரு
கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே ;
பற்றித் தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே !

என்செய லாவதி யாதோன்று மில்லை யினித்தெய்வமே
யுன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப் பிறப்பதற்கு
முன்செய்த தீவினையோ இங்கனே வந்து மூண்டதுவே.

நன்ருரிற் பூட்டிய சூத்திரப் பாவை, நன்ருர் தப்பினுல்
தன்ருலு மாடிச் சலித்திடுமோ ? அந்தத் தன்மையைப்போல்
உன்ருலி யானுந் திரிவதல்லான்,மற் றுனைப்பிரிந்தால்
என்ருலிங் காவதுண்டோ, இறைவா கச்சி யேகம்பனே ! 440

நல்லா ரிணக்கமு, நின்பூசை நேயமு ஞானமுமே,
யல்லாது வேறு நிலையுளதோ ? அகமும் பொருளும்
இல்லாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே யிறைவா கச்சி யேகம்பனே !

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை ; பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை ; யிடைநடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்தந்த தென்று கொடுக்கறியா(து)
இறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே !

நாவார வேண்டும் விதஞ் சொல்லுவார்;"உனை நான்பிரிந்தாற்
சாவே"னென் றேயிருந் தொக்கவுண்பார்கள் ; கைதான் வரண்டால்
"போய்வாரு"மென்று நடுத்தலைக்கே குட்டும் பூவையருக்(கு)
ஈவார் தலைவிதியோ இறைவா கச்சி யேகம்பனே !

அன்ன விசாரம் ; அதுவே விசாரம் ; அது வொழிந்தாற்
சொன்ன விசாரந் தொலையா விசாரம்;நற் றோகையரைப்
பன்ன விசாரம் ; பலகால் விசாரம்;இப் பாவிநெஞ்சுக்(கு)
என்ன விசாரம் வைத்தாய், இறைவா கச்சி யேகம்பனே !

ஊருஞ் சதமல்ல ; உற்றுர் சதமல்ல ; உற்றுப் பெற்ற
பேருஞ் சதமல்ல ; பெண்டீர் சதமல்ல ; பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல ; செல்வஞ் சதமல்ல ; தேசத்திலே
யாருஞ் சதமல்ல ; நின்றுள் சதங்கச்சி யேகம்பனே ! 445

பொல்லா இருளகற் றுங்கதிர் கூகையென் புண்கண்ணினுக்
கல்லா யிருந்திடு மாறெுக்குமே ; அறிவோர் உளத்தில்
வல்லார் அறிவார் ; அறியார் தமக்கு மயக்கங் கண்டாய் ;
எல்லாம் விழிமயக்கே யிறைவா கச்சி யேகம்பனே !

தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பிவிட்டால்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும், புவியுமெங்கே ?
மெய்வைத்த செல்வமெங்கே ? மண்டலிகர்தம் மேடை யெங்கே ?
கைவைத்த நாடக சாலையெங் கேயிது கண்மயக்கே !

காடோ, செடியோ, கடற்புறமோ, கனக மேமிகுந்த
நாடோ, நகரோ, நகர்நடுவோ, நலமே மிகுந்த
வீடோ, புறந்திண்ணையோ, தமியேனுடல் வீழுமிடம் !
நீடோய் கழுக்குன்றி லீசா வுயிர்த்துணை நின்பதமே !

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து, பட்டாடை சுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடி யாடி முடிந்தபின்பு
செத்துக் கிடக்கும் பிணத்தருகே யினிச் சாம்பிணங்கள்
கத்துங் கணக் கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே !

எரியெனக் கெனும் ; புழுவோ எனக்கெனும் ; இந்த மண்ணுஞ்
சரியெனக் கெனும் ; பருந்தோ எனக்கெனுந் தான்புசிக்க
நரியெனக் கெனும்;புன் னுயெனக் கென்னுமிந் நாறுடலைப்
பிரியமுடன் வளர்த்தேன் இதனு லென்ன பேறெனக்கே ? 450

என்பெற்ற தாயாரும் என்னைப் பிணமென் றிகழ்ந்துவிட்டார் ;
பொன்பெற்ற மாதரும் போவென்று சொல்லிப் புலம்பிவிட்டார் ;
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைத்தார் ;
உன்பற் றெழிய வொருபற்று மில்லை யுடையவனே !

பூனும் பணிக்கல்ல ; பொன்னுக்குத் தானல்ல, பூமிதனைக்
காணும் படிக்கல்ல ; மங்கையர்க் கல்ல ; நற் காட்சிக்கல்ல ;
சேனுங் கடந்த சிவனடிக் கல்ல ; வன் சிந்தை கெட்டுச்
சானும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே !

ஆங்காரப் பொக்கிசங் கோபக் களஞ்சியம் ; ஆணவந்தான்
நீங்கா அரண்மனை ; பொய்வைத்த கூடம்;விண் ணீடிவளர்
தேங்கார் பெருமதிற் காம விலாசமித் தேகங் கந்தல் ;
பாங்கா யுனைப்பணிந் தெப்படி ஞானம் பலிப்பதுவே ?

மாத்தா னவத்தையு மாயா புரியின் மயக்கத்தையும்
நீத்தார் தமக்கொரு நிட்டையுண்டோ ? நித்த னன்புகொண்டு
வேர்த்தாற் குளித்துப் பசித்தாற் புசித்து விழிதுயின்று
பார்த்தா லுலகத் தவர்போ லிருப்பர்பற் றற்றவரே.

பேய்போற் றிரிந்து, பிணம்போற் கிடந்திட்ட பிச்சையெலாம்
நாய்போ லருந்தி நரிபோ லுழன்றுநன் மங்கையரைத்
தாய்போற் கருதித் தமர்போ லனைவர்க்குந் தாழ்மைசொல்லிச்
சேய்போ லிருப்பர் கண்டீர் உண்மைஞானந் தெளிந்தவரே !

நினைமின் மனனே ! நினைமின் மனனே !
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே !
பிறந்தன இறக்கும் ; இறந்தன பிறக்கும்
தோன்றின மறையும் மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்கும் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கும் மறந்தன வுணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும் ;
அருந்தின மலமாம் ; புனைந்தன அழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்
என்றிவை யனைத்தும் உணர்ந்தனை ; யன்றியும்
செல்வத்துக் களித்தனை ; தரித்திரத் தழுங்கினை
பெற்றனை யனைத்தும் அனைத்துமுனைப் பெற்றன
ஓம்பினை யனைத்தும் அனைத்துமுனை ஓம்பின
இன்பமுந் துன்பமும் இருநிலத் தருந்தினை ;
உடலுறு வாழ்க்கையை உள்ளுறத் தேர்ந்து
அம்பலத் தரசனை யானந்தக் கூத்தனை
நெருப்பி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே நினைமின் மனனே !

# 13. மெய்ஞ்ஞானப் புலம்பல்

(பர்த்திரகிரியார்)

ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம் ?
மாயாப் பிறவி மயக்கத்தை யூடறுத்துக்
காயா புரிக்கோட்டை கைக்கொள்வ தெக்காலம் ?
வேடிக்கை யுஞ்சொகுசு மெய்ப்பகட்டும் பொய்ப்பகட்டும்
வாடிக்கை யெல்லா மறந்திருப்ப தெக்காலம் ?
வம்படிக்கு மாதருடன் வாழ்ந்தாலு மன்னுபுளி
யம்பழமு மோடும்போ லாவதினி யெக்காலம் ?
ஒலிபடரும் குண்டலியை யுன்னியுணர் வாலெழுப்பிச்
சுழுமுனையின் தாள்திறந்து தூண்டுவது மெக்காலம் ?
இடைபிங் கலைநடுவே யியங்குஞ் சுழுமுனையில்
தடையறவே நின்று சவித்திருப்ப தெக்காலம் ?
மூல நெருப்பைவிட்டு முட்டிநிலா மண்டபத்தில்
பாலை யிறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம் ?
ஓடாம லோடி யுலகைவலம் வந்துசுற்றித்
தேடாம லென்னிடமாய்த் தெரிசிப்ப தெக்காலம் ?
ஆறாதா ரங்கடந்த ஆனந்தப் பேரொளியைப்
பேறாகக் கண்டு நான் பெற்றிருப்ப தெக்காலம் ?
நானென் றறிந்தவனை நானறியாக் காலமெல்லாம்
தானென்று நீயிருந்த தனையறிவ தெக்காலம் ?
உள்ள மறியா தொளிந்திருந்த நாயகனைக்
கள்ள மனந்தெளிந்து காண்பதினி யெக்காலம் ?
ஊனாகி யூனி லுயிராகி யெவ்வுயிருந்
தானாகி நின்ற தனையறிவ தெக்காலம் ?
என்னைவிட்டு நீங்காமல், என்னிடத்து நீயிருக்க
உன்னைவிட்டு நீங்கா தொருப்படுவ தெக்காலம் ?
மனதையொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
எனதறிவை யம்பாக்கி யெய்வதினி யெக்காலம் ?
கூட்டிலடை பட்டபுழு குழவியுருக் கொண்டதுபோல்,
வீட்டிலடை பட்டருளை வேண்டுவது மெக்காலம் ?
பொன்னிற் பலவிதமாய் பூஷணமுண் டானதுபோல்
உன்னிற் பிறந்துன்னி லொடுங்குவது மெக்காலம் ?
கருக்கொண்ட முட்டைதனைக் கடலாமை தானினைக்க
உருக்கொண்ட வாறதுபோல் உனையடைவ தெக்காலம் ?
கடைந்த வெண்ணெய் மோரிற் கலவாத வாறதுபோல்

உடைந்து தமியேன் உனைக்காண்ப தெக்காலம் ?
மின்னெழுந்து மின்னடுங்கி விண்ணி லுறைந்தாற்போல்
என்னுள்நின்ற தென்னுளே யானறிவ தெக்காலம் ?
எங்கும் பரவடிவா யென்வடிவே நின்வடிவாய்க்
கங்குல்பக லின்றியுனைக் கண்டிருப்ப தெக்காலம் ?
அருவி மலைநடுவே யாயிரக்கால் மண்டபத்தில்
திருவிளையா டற்கண்டு தெரிசிப்ப தெக்காலம் ?
எள்ளுங் கரும்பும் எழுமலரும் காயமும்போல்
உள்ளும் புறம்புநின்ற துற்றறிவ தெக்காலம் ?
அன்னம் புனலைவகுத் தமிர்தத்தை யுண்டதுபோல்,
என்னை வகுத்துன்னை யினிக்காண்ப தெக்காலம் ?
நானவனுய்க் காண்பதெல்லா ஞானவிழி யாலறிந்து,
தானவனுய் நின்று சரணடைவ தெக்காலம் ?
உற்றுற்றுப் பார்க்க வொளிதருமா னந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நினைத்திருப்ப தெக்காலம் ?

## 14. தாயுமானுர் உபநிஷத்து

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடராய் எல்லாம்
வைத்திருந்த தாரகமாய் ஆனந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்ற வொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம்.

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி அருவுருவத்
தன்மை நாமம்
ஏதுமின்றி எப்பொருட்கும் எவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யும்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம்.

அங்கிங் கெனுதபடி யெங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது ? தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி யெல்லாம்

தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது ? மனவாக் கினில்
தட்டாமல் நின்றதெது ? சமயகோ டிகளெலாந்
தந்தெய்வம் எந்தெய்வ மென்று
எங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது ?
எங்கணும் பெருவ ழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமாய்
என்றைக்கு முள்ளதெது ? மேல்
கங்குல்பக லறநின்ற எல்லையுள தெது ? அது
கருத்திற் கிசைந்த ததுவே ;
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய்கு வாம்.

சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல் யானெனுந்
தன்மைநினை யன்றி யில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவ மிதுவே ;
இந்தநிலை தெளியநான் நெக்குருகி வாடிய
இயற்கைதிரு வுளமறி யுமே
இந்நிலையி லேசற் றிருக்கஎன் றுல்மடமை
இதசத்ரு வாக வந்து,
சிந்தைகுடி கொள்ளுதே ; மலமாயை கன்மந்
திரும்புமோ தொடு வழக்காய்ச்
சென்மம்வரு மோஎனவும் யோசிக்கு தேமனது ;
சிரத்தையெனும் வாளும் உதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய் குவாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந் தமே !

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர் ;
பொறிபுலன் அடங்கு மிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம்
போனஇட மென்பர் சிலபேர் ;
நாதவடி வென்பர்சிலர் ; விந்துமய மென்பர்சிலர் ;
நட்டநடு வேயி ருந்த
நாமென்பர் சிலர் ; உருவ மாமென்பர் ; சிலர்கருதி
நாடில்அரு என்பர் சிலபேர் ;

பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர் ;
    பேசில்அரு ளென்பர் சிலபேர் ;
    பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர் சிலர்
    பிறவுமே மொழிவர் ; இவையால்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலால்
    பரமசுக நிட்டை பெறுமோ ?
    பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
    பரிபூர ணானந் தமே !

எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்
    யாதினும் அரிதரிது காண் ;
    இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ
    ஏதுவருமோ அறிகிலேன்
கண்ணகல் நிலத்துநான் உள்ளபொழு தேஅருட்
    ககனவட் டத்தில் நின்று
    காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
    கலந்துமதி யவச முறவே
பண்ணுவது நன்மைஇந் நிலைபதியு மட்டுமே
    பதியா யிருந்து தேகப்
    பவுரிகுலை யாமலே கௌரிகுண் டலியாயி
    பண்ணவிதன் அருளி னாலே
விண்ணிலவு மதியமுதம் ஒழியாது பொழியவே
    வேண்டுவே னுமதடிமை நான்
    வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
    வித்தகச் சித்தர் கணமே.

ஆசைக்கோ ரளவில்லை அகிலமெல் லாங்கட்டி
    ஆளினுங் கடல்மீ திலே
    ஆணைசெல வேநினைவர் ; அளகேசன் நிகராக
    அம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
    நெடுநா ளிருந்த பேரும்
    நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
    நெஞ்சுபுண் ணாவர் எல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
    உறங்குவது மாக முடியும்.
    உள்ளதே போதுநான் நான்எனக் குளறியே
    ஒன்றைவிட் டொன்று பற்றிப்

பாசக் கடற்குளே வீழாமல், மனதற்ற
பரிசுத்த நிலையை அருள்வாய்.
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ஞனந் தமே !

கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக இருக்கநீ ஞானஅனல் மூட்டியே
கனிவுபெற உள்ளு ருக்கிப்
பருவம தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதி செய்து,
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை என்சொல் லுகேன் ;
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்தம்
ஆதியாம் அந்த மீதும்
அத்துவித நிலையராய் என்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவி னூடுந்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்தி முதலே,
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
ஆங்கார முளையை எற்றி
அத்துவித மதமாகி மதம்ஆறும் ஆருக
அங்கையின் விலாழி யாக்கிப்
பாசஇருள் தன்னிழ லெனச்சுளித் தார்த்துமேல்
பார்த்துப் பரந்த மனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயை நூறித்
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக் குளேய டக்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
திருவருட் பூர்த்தி யான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகச மெனவ ளர்த்தாய்—
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

மின்னனைய பொய்யுடலை நிலையென்றும் மையிலகு
விழிகொண்டு மையல் பூட்டும்
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்க மென்றும் ;
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றியிப்
பொய்வேட மிகுதி காட்டிப்
பொறையறிவு துறவீதல் ஆதிநற் குணமெலாம்
போக்கிலே போக விட்டுத்
தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகா யதன்
சமயநடை சாராமல், வேதாந்த சித்தாந்த
சமரச சிவாநு பூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞான குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே.

பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்திஅப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்கஎனில்
நானும்என் உளம்நிற்றி நீ ;
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்,
நான்பூசை செய்யன் முறையோ !
விண்ணேவி ணுதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந் தமே !
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தே அவித்தின் முளையே
கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே
கதிக்கான மோன வடிவே !
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே.

துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துட்டதே வதைக ளில்லை
துரியநிறை சாந்ததே வதையாம் உனக்கே
தொழும்பன் அன்பபிஷேக நீர் ;

உள்ளுறையி லென்னுவி நைவேத்தியம் ; ப்ராணன்
ஓங்குமதி தூப தீபம்
ஒருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித் தேன்கருணை கூர் ;
தெள்ளுமறை வடியிட்ட அமுதப் பிழம்பே,
தெளிந்த தேனே சீனியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே,
தெவிட்டாத ஆனந் தமே,
கள்ளன்அறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
கலக்கவரு நல்ல உறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணு கரக் கடவுளே.

பொய்திகழும் உலகநடை என்சொல்கேன் என்சொல்கேன்
பொழுதுபோக் கேதென் னிலோ
பொய்யுடல் நிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
புசித்தபின் கண்ணு றங்கல் ;
கைதவ மலாமலிது செய்தவம தல்லவே
கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க்
கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ அதை யறிகிலேன் ;
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினெடு செம்பொன் மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்
வரைந்துசய விருது காட்டி
மெய்திகழும் அஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே குணசாந் தரே ;
வேதாந்த சித்தாந்த சமரசநன் நிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.

மாறுபடு தர்க்கந் தொடுக்கஅறி வார்சாண்
வயிற்றின் பொருட்ட தாக
மண்டலமும் விண்டலமும் ஒன்றுகி மனதுழல
மாலாகி நிற்க அறிவார் ;
வேறுபடு வேடங்கள் கொள்ளஅறி வாரொன்றை
மௌனமௌனென் றகம்வே றதாம்
வித்தையறி வார்எமைப் போலவே சந்தைபோல்
மெய்ந்நூல் விரிக்க அறிவார் ;

சிறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்க அறிவார் ;
திறமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடும் உளற அறிவார்.
ஆறுசம யங்கடொறும் வேறுவே றுகிவிளை
யாடுமுனை யாவ ரறிவார் ?
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மான பரமே.

காராரும் ஆணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் கார மென்னும்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்தி மென்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீரா கவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காத வண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்ட மெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பார மென்றும்
ஆராரும் அறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரிய மயமே
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மான பரமே. 505

இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
எனருசித் திடவலிய வந்து
இன்பங்கொ டுத்தநினை எந்நேர நின்னன்பர்
இடையறு துருகி நாடி
உன்னிய கருத்தவிழ உரைகுளறி உடலெங்கும்
ஒய்ந்தயர்ந் தவச மாகி,
உணர்வரிய பேரின்ப அநுபூதி உணர்விலே
உணர்வார்கள் ; உள்ளபடி காண்
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
கைக்கொள்வள் பக்கு வத்தில் ;
கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
கருதிநகை யாவ ளதுபோல்

சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்ப மாம் ;
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே ;

கல்லேனும் ஐயவொரு காலத்தில் உருகுமென்
கல்நெஞ்சம் உருக விலையே
கருணைக் கிணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க வொருகட வுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்கு முண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிறங்கி எனை
வாழ்விப்ப துன்பரங் காண்
பொல்லாத சேயெனில், தாய்தள்ளல் நீதமோ
புகலிடம் பிறிது முண்டோ ?
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையே னுவ னந்தோ !
சொல்லால் முழக்கிலோ சுகமில்லை ; மௌனியாய்ச்
சும்மா இருக்க அருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுக வாரியே !

அரும்பொனே மணியேஎன் அன்பேஎன் அன்பான
அறிவேஎன் அறிவி லூறும்
ஆனந்த வெள்ளமே என்றென்று பாடினேன்
ஆடினேன் நாடி நாடி.
விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருக்கை கூப்பி,
விண்மாரி எனஎனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தே னியான்.
இரும்புநேர் நெஞ்சகக் கள்வ னுனுலும்உனை
இடைவிட்டு நின்ற துண்டோ ?
என்றுநீ யன்றுநான் உன்னடிமை யல்லவோ ?
யாதேனும் அறியா வெறுந்
துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ ?
தொண்டரொடு கூட்டு கண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுக வாரியே.

அன்னே யனேயெனுஞ் சிலசமயம் ; நின்னையே
ஐயா ஐயா என்னவே
அலறிடுஞ் சிலசமயம் ; அல்லாது பேய்போல
அலறியே ஒன்றும் இலவாய்ப்
பின்னேதும் அறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமய மேல்
பேசரிய ஒளியென்றும் வெளியென்றும் நாதாதி
பிறவுமே நிலய மென்றுந்
தன்னே ரிலாததோ ரணுவென்றும் மூவிதத்
தன்மையாங் கால மென்றுஞ்
சாற்றிடுஞ் சிலசமயம் ; இவையாகி வேறதாய்ச்
சதாஞான ஆனந்த மாய்—
என்னே யெனேகருணை விளையாட் டிருந்தவாறு !
எம்மனோர் புகல எளிதோ ?
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்ற பொருளே.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம் ;
கரடிவெம் புலிவா யையுங்
கட்டலாம் ; ஒருசிங்கம் முதுகின்மேற் கொள்ளலாம் ;
கட்செவி எடுத்தாட் டலாம் ;
வெந்தழலின் இரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண் ணலாம் ;
வேறொருவர் காணாமல் உலகத்து லாவலாம் ;
விண்ணவரை ஏவல் கொளலாம் ;
சந்ததமும் இளமையோ டிருக்கலாம் ; மற்றொரு
சரீரத்தி னும்புகு தலாம் ;
சலமேல் நடக்கலாம் ; கனல்மே லிருக்கலாம் ;
தன்னிகரில் சித்தி பெறலாம் ;
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறமரிது சத்தாகி என்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே.

பன்மு கச்சமய நெறிப டைத்தவரும்
யாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் வாத தர்க்கமிடு
படிற ருந்தலை வணங்கிடத்

தன்மு கத்திலுயிர் வரவ ழைக்கும்எம
தரும னும்பகடு மேய்க்கியாய்த்
தனியி ருப்பவட நிழ லூடுவளர்
சனக னுதிமுனி வோர்கள்தஞ்
சொன்ம யக்கமது தீர அங்கைகொடு
மோன ஞானம துணர்த்தியே
சுத்த நித்தஅரு ளியல்ப தாகவுள
சோம சேகரகிர் பாளுவாய்த்
தென்மு கத்தின்முக மாயி ருந்தகொலு
எம்முக கத்தினும் வணங்குவேன்
தெரிவ தற்கரிய பிர மேஅமல
சிற்சு கோதய விலாசமே.

அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
ஆரமிர்தே என்கண்ணே அரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே புனிதவாழ்வே
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக் கருவி ஆதி
விரிவினையுங் கூட்டிஉயிர்த் திரளை யாட்டும்
விழுப்பொருளே யான்சொலும்வின் ணப்பங் கேளே !

தானுன தன்மயமே யல்லால் ஒன்றைத்
தலையெடுக்க வொட்டாது ; தலைப்பட் டாங்கே
போனுலுங் கர்ப்பூர தீபம் போலப்
பொயொளிப்ப தல்லாது புலம்வே றின்றும் ;
ஞானுகா ரத்தினெடு ஞேய மற்ற
ஞாதுருவும் நழுவாமல், நழுவி நிற்கும் ;
ஆனுலும் இதன்பெருமை எவரக்கார் சொல்வார்
அதுவானுல் அதுவாவர் அதுவே சொல்லும்.

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்கா லமும்
பவிசுண்டு தவிகண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிர மனுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளு முண்டு.
கறையுண்ட கண்டர்பால் அம்மைநின் தாளில்
கருத்தொன்றும் உண்டாகுமேல்,

நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானஆ னந்த ஒளியே,
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனும் அகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூ தனன் தங்கையே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே. 515

காடுங் கரையு மனக்குரங்கு கால்விட் டோட அதன்பிறகே
ஒடுந் தொழிலாற் பயனுளதோ ? ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குயிராய்
ஆடுங் கருணைப் பரஞ்சோதி யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவ மிதுகண்டீர் சேர வாருஞ் சகத்திரே !

காக முறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித்ததும்பிப்பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ ! இன்புற்றிடநாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் சகத்திரே!

## 15. தாயுமான கிதை

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங் கிருப்பது நீ யன்றோ பராபரமே !
எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே !
கொல்லா விரதங் குவலயமெல் லாம் ஓங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் இச்சை பராபரமே ! 520
கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே !
என்னதுயான் என்னலற்றோர் எங்கிருந்து பார்க்கினுநின்
சந்நிதியாம் நீபெரிய சாமி பராபரமே !
நீயின்றி நானோ ? நினைவார் ? என் நெஞ்சகமார் ?
தாயின்றிச் சூலுமுண்டோ சாற்றாய் பராபரமே !
வாக்காய் மனமாய் மனவாக் கிறந்தவர்பால்
தாக்காதே தாக்குந் தனியே பராபரமே !
நன்றறியேன் தீதறியேன் நானென்று நின்றவனோர்
என்றறியேன் நான்ஏழை என்னே பராபரமே ! 525
எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கும்
அத்தன்மை நின்னருளும் அன்றோ பராபரமே !

பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்து போற்பருவம்
பெற்றவர்க்கே நின்னருள்தான் பேறும் பராபரமே !
நின்போதத் தாலே நினைப்பு மறப்புமென்றால்
என்போத மெங்கே யியம்பாய் பராபரமே !
அல்லும் பகலும் அறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமைகாண் பராபரமே !
தன்னை யறிந்தால் தலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றும்உண்டோ பேசாய் பராபரமே ! 530
தன்னை யறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை யறிதற் குபாயம் பராபரமே !
வான்காண வேண்டி மலையேற லொக்குமுனை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே !
விளக்குந் தகளியையும் வேறென்னார் நின்னைத்
துளக்கமறச் சிவனென்று சொல்வார் பராபரமே !
என்போல் எளியவரும் எங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரும் உண்டோ பராபரமே !
செப்புவதெல் லாஞ்செபநான் சிந்திப்ப தெல்லாம் நின்
ஒப்பில் தியானமென ஓர்ந்தேன் பராபரமே !
எந்தெந்த நாளும் எனைப்பிரியா தென்னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டஅருள் தேவே பராபரமே ! 535
ஆரிருந்தென் ஆர்போயென் ஆரமுதாம் நின்னருளின்
சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே !
அஞ்சலஞ்சல் என்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சில் உணர்த்தும் நிறைவே பராபரமே !
ஆடுவதும் பாடுவதும் ஆனந்த மாகநின்னைத்
தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே !
கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
யெங்கும் ஒருவழியே யெந்தாய் பராபரமே !
தம்முயிர்போல் எவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே ! 540
நெஞ்சகமே கோயில் ; நினைவே சுகந்தம் ; அன்பே
மஞ்சனநீர் ; பூசைகொள்ள வாராய் பராபரமே !
கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பில் தேகம் விழுமோ பராபரமே ?
விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே !
அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே !

சினமிறக்கக் கற்றலுஞ் சித்தியெலாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே ! 545
கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்க்
கள்ளமனந் துள்ளுவதென் கண்டாய் பராபரமே !
மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பிஐயோ
நின்னை மறக்கை நெறியோ பராபரமே !
சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்
மன்னுங் கலைஞான மார்க்கம் பராபரமே !
ஏதுவந்தும் ஏதொழிந்தும் என்னதுயான் என்னார்கள்
போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே !
ஆனந்த மானநின்னை யன்றியொன்றை யுன்னாத
மோனந் தமியேற்கு முத்தி பராபரமே ! 550
கற்றாலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலும் இன்பமுண்டோ பேசாய் பராபரமே !
படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே !
சித்த நிருவிகற்பம் சேர்ந்தார் உடல்தீபம்
வைத்தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே !
நானா னெனக்குளறு நாட்டத்தால் என்னைவிட்டுப்
போனாலும் உன்னைவிட்டுப் போகேன் பராபரமே !
எண்ணில்பல கோடியுயி ரெத்தனையோ அத்தனைக்குங்
கண்ணிற் கலந்தஅருட் கண்ணே பராபரமே ! 555
கொலைகளவு கட்காமங் கோபம்விட் டாலன்றோ
மலையிலக்காய் நின்னருள்தான் வாய்க்கும் பராபரமே !
அத்துவித மான அயிக்ய அனுபவமே
சுத்தநிலை யந்நிலையார் சொல்வார் பராபரமே !
நேசத்தால் நின்னை நினைக்கு நினைவுடையார்
ஆசைக் கடலில் அழுந்தார் பராபரமே !
பொய்யகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோர்
ஐயமிலை, ஐயமில்லை ஐயா பராபரமே !
எங்கனுநீ யென்றால் இருந்தபடி யெய்தாமல்
அங்குமிங்கு மென்றலைய லாமோ பராபரமே ! 560
சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுனைத்
தந்தவுனக் கென்னையுநான் தந்தேன் பராபரமே !
முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே பராபரமே !
எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே !

கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போல் மெய்ஞ்ஞான
மெய்விளக்கின் பின்னேபோய் மெய்காண்ப தெந்நாளோ ?
காட்டுந் திருவருளே கண்ணுகக் கண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநாள் எந்நாளோ ? 565
நானுன தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந்
தானுன வுண்மைதனைச் சாருநா ளெந்நாளோ ?
எல்லையிற்பே ரின்பமயம் எப்படியென் றேர்தமக்குச்
சொல்லறியா வூமர்கள்போற் சொல்லுநா ளெந்நாளோ ?
உள்ளத்தி னுள்ளேதா னூறுஞ் சிவானந்த
வெள்ளந் துளைந்து விடாய்தீர்வ தெந்நாளோ ?
கன்னலுடன் முக்கனியுங் கற்கண்டுஞ் சீனியுமாய்
மன்னுமின்ப ஆரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ ?
செப்பரிய தன்கருணைச் சிற்சுகனுர் பூரணத்தில்
அப்பினிடை யுப்பாய் அணையுநாள் எந்நாளோ ? 570
தூய அறிவான சுகரூப சோதிதன்பால்
தீயில் இரும்பென்னத் திகழுநா ளெந்நாளோ ?
என்செயினும் என்பெறினும் என்னிறைவா ஏழையன்யான்
நின்செயலென் றுன்னும் நினைவுவரக் காண்பேனே ?
உள்ளும் புறம்பும் ஒருபடித்தாய் நின்றுசுகங்
கொள்ளும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனே ?
எல்லாந் தெரியும் இறைவாஎன் அல்லலெலாஞ்
சொல்லாமுன் நீதான் தொகுத்திரங்கக் காண்பேனே ?
காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்றஅந்த
வீண்பாவம் போயதுவாய் மேவுநாள் எந்நாளோ ? 575
ஓராமல் மந்திரமும் உன்னுமல் நம்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநாள் எந்நாளோ ?
உள்ளத்தி னுள்ளே ஒளிந்திருந்தென் கள்ளமெல்லாம்
வள்ளலறிந் தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே !
என்னறிவுக் குள்ளே யிருந்ததுபோல் ஐயாவே
நின்னறிவுள் நின்னுடனே நிற்கவைத்தால் ஆகாதோ ?
ஆவித் துணையே யருமருந்தே யென்றனைநீ
கூவியழைத் தின்பங் கொடுத்தாற் குறையாமோ ?
காலால் வழிதடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ ? 580

ஆனந்தக்களிப்பு

ஆதி யனுதியும் ஆகி—எனக்
காநந்த மாயறி வாய்நின் றிலங்குஞ்
சோதி மவுனியாய்த் தோன்றி—அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னுண்டி தோழி !

பாராதி பூதநீ யல்லே—உன்னிப்
பாரிந் திரியங் கரணநீ யல்லே
ஆராய் உணர்வுநீ யென்றுன்—ஐயன்-
அன்பா யுரைத்த சொல் ஆனந்தந் தோழி

கடலின் மடைவிண்ட தென்ன—இரு
கண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிய
உடலும் புளகித மாக—என
துள்ள முருக வுபாயஞ்செய் தாண்டி !

ஆங்கென்றும் ஈங்கென்றும் உண்டோ—சச்சி
தானந்தச் சோதி யகண்ட வடிவாய்
ஓங்கி நிறைந்தது கண்டாற்—பின்னர்
ஒன்றென் றிரண்டென் றுரைத்திட லாமோ ?

அருளால் எவையும்பார் என்றுன்—அத்தை
அறியாதே சுட்டியென் னறிவாலே பார்த்தேன் ;
இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
என்னேயுங் கண்டிலன் என்னேடி தோழி 585

ஆக்கி யளித்துத் துடைத்துந்—தொழில்
அத்தனே வைத்தும்எள் ளத்தனே யேனுந்
தாக்கற நிற்குஞ் சமர்த்தன்—உள்ள
சாட்சியைச் சிந்திக்கத் தக்கது தோழி !

கண்ணிற் காண்பதுன் காட்சி ; கை யாற்றெழில்
பண்ணல் பூசை ; பகர்வது மந்திரம்;
மண்ணெ டைந்தும் வழங்குயிர் யாவுமே
அண்ண லேநின் அருள்வடி வாகுமே.

## 16. அருட்சோதி சாதனம்

படிப்படக்கிக் கேள்வியெல்லாம் பற்றறவிட் டடக்கி,
பார்த்திடலும் அடக்கியுறும் பரிசமெல்லாம் அடக்கி,
தடிப்பறும்ஊண் சுவையடக்கிக் கந்தமெல்லாம் அடக்கிச்
சாதிமதஞ் சமயமெனும் சழக்கையும்விட் டடக்கி,
மடிப்படக்கி நின்றுலும், நில்லேன்நான் எனவே,
வனக்குரங்கும் வியப்பஎன்றன் மனக்குரங்கு குதித்த
துடிப்படக்கி ஆட்கொண்ட துரையேஎன் உளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே,

வாழையடி வாழையென வந்ததிருக் கூட்ட
 மரபினில்யான் ஒருவனன்றோ ? வகையறியேன் ; இந்த
ஏழைபடும் பாடுனக்குத் திருவுளச்சம் மதமோ ?
 இதுதகுமோ இதுமுறையோ இதுதருமந் தானோ ?
மாழைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்யான் உனக்கே
 மகனலனோ ? நீ எனக்கு வாய்த்ததந்தை யலையோ ?
கோழையுல குயிர்த்துயரம் இனிப்பொறுக்க மாட்டேன்—
 கொடுத்தருள்நின் அருளொளியைக் கொடுத்தருளிப் போதே.

திருக்கதவந் திறவாயோ திரைகளெலாந் தவிர்த்தே
திருவருளாம் பெருஞ்ஜோதித் திருவுருக்காட் டாயோ ?
உருக்கியமு தூற்றெடுத்தென் உடம்புயிரோ டுளமும்
ஒளிமயமே ஆக்குறமெய் உணர்ச்சிஅரு ளாயோ ?
கருக்கருதாத் தனிவடிவோய், நின்னைஎன்னுட் கலந்தே
கங்குல்பக லின்றிஎன்றும் கனிந்திடச்செய் யாயோ ?
செருக்கருதா தவர்க்கருளும் சித்திபுரத் தரசே
சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே...... 590

உரைகடந்த திருவருட்பேர் ஒளிவடிவைக் கலந்தே
உவட்டாத பெரும்போகம் ஓங்கியுறும் பொருட்டே
இரைகடந்தென் உள்ளகத்தே எழுந்துபொங்கித் ததும்பி
என்காதற் பெருவெள்ளம் என்னைமுற்றும் விழுங்கிக்
கரைகடந்து போனதினித் தாங்கமுடி யாது.
கண்டுகொள்ளாய் நீயேஎன் கருத்தின்வண்ணம் அரசே
திரைகடந்த குருமணியே சிவஞான மணியே
சித்தசிகா மணியேஎன் திருநடநா யகனே !

புண்படா வுடம்பும் புரைபடா மனமும்,
 பொய்படா ஒழுக்கமும் பொருந்திக்
கண்படா திரவும் பகலுநின் றனையே
 கருத்தில்வைத் தேத்துதற் கிசைந்தேன்.
உண்பனே எனினும், உடுப்பனே எனினும்,
 உலகரை நம்பிலேன் ; எனது
நண்பனே நலஞ்சார் பண்பனே யுனையே
 நம்பினேன் கைவிடேல் எனையே !

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
 உத்தமர்தம் உறவு வேண்டும்.
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
 உறவுகல வாமை வேண்டும்,

பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும் ; பொய்மை
பேசா திருக்க வேண்டும்.
பெருநெறி பிடித்தொழுக வேண்டுமத மான்பேய்
பிடியா திருக்க வேண்டும்.
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டுமுனை
மறவா திருக்க வேண்டும்.
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் ; நோயற்ற
வாழ்வில் நான் வாழ வேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே,
தண்முகத் துய்யமணி, உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

வன்பெரு நெருப்பினைப் புன்புழுப் பற்றுமோ ?
வானையொரு மான் தாவுமோ ?
வலிவுள்ள புலியையோர் எலி சீறுமோ ? பெரிய
மலையையோர் ஈச்சிற கினால்
துன்புற அசைக்குமோ ? வச்சிரத் தூணொரு
துரும்பினால் தூண்டா குமோ ?
அன்புடைய நின்னடியர் பொன்னடியை உன்னுமவர்
அடிமலர் முடிக்கணிந் தோர்க்கு
அவலம் உறுமோ காமம் வெகுளியுறுமோ ? மனத்
தற்பமும் விகற்பம் உறுமோ
தன்புகழ்செய் சென்னையில் கந்தகோட் டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

## 17. திருப்புகழ் மாலை

**நா**ள்என் செயும்வினை தானென்செயும் எனை நாடி வந்த
கோள்என் செயும் கொடும் கூற்றென் செயும் குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே. 595

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும்இல் லாதொன்று வந்துவந்து,
தாக்கும் மனோலயம் தானே தரும் எனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுகவா சொல்லொணாதிந்த ஆனந்தமே !

ஆனா அமுதே அயில்வேல் அரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ ?
யானாகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலைநின் றதுதற் பரமே

தூசா மணியும் துகிலும் புனைவாள்,
நேசா முருகா நினதன் பருளால்,
ஆசா நிகளம் துகளா யினபின்
பேசா அநு பூதி பிறந் ததுவே

எந்தாயு மெனக் கருள்தந் தையு நீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே உமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே.

பொறியும் புலனும் புதிதும் முதிதும்
குறியும் குணமும் குலமும் குடியும்
நெறியும் பிறிதொன் றுமிலா நிலையான்
அறியுந் தரமோ அயில்வே லவனே. 600

காடும் மலையுங் கடலும் உருளச்
சாடும் தனிவே லுடையாய் சரணம்
ஆடும் மயில்வே லரசே சரணம்
பாடும் வரதற் பரனே சரணம்

ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுகம் ஆனபொருள் நீயருளல் வேண்டும்
ஆதிஅரு ணாசலம் அமர்ந்தபெரு மாளே.

முத்தைத் தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர—எனவோதும்
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும்—அடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
    ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
    பட்டப்பகல் வட்டத் திகிரியில்—இரவாகப்
பத்தற்கிர தத்தைத் தடவிய
    பச்சைப்புயல் மெச்சத் தருபொருள்
    பட்சத்தொடு ரக்ஷித் தருள்வதும்—ஒருநாளே

அகரமு மாகி அதிபனு மாகி அதிகமு மாகி—அகமாகி
அயனென லாகி அரியென லாகி அரனென லாகி—அவர்மேலாய்
இகரமு மாகி எவைகளு மாகி இனிமையு மாகி—வருவோனே
இருநில மீதில் எளியனும் வாழ எனதுமு னோடி—வரவேணும்
மகபதி யாகி, மருவும் வலாரி மகிழ்களி கூரும்—வடிவேலா
வனமுறை வேடன் அருளிய பூஜை மகிழ்கதிர் காமம்—உடையோனே.
செககண சேகு தகுதிமி தோதி திமியென ஆடும்—மயிலோனே
திருமலிவான பழமுதிர் சோலை மலைமிசை மேவு—பெருமாளே !

மங்குல் இன்புறு வானுய் வானூ
    டன்ற ரும்பிய காலாய், நீள்கால்
    மண்டு றும்புகை நீரு வீருய்—எரிதியாய்
வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்
    அம்ப ரம்புனை பாராய் பாரேழ்
    மண்ட லம்புனை நியாய் நானுய்—மலரோனுய்
உங்கள் சங்கரர் தாமாய் நாமார்
    அண்ட பந்திகள் தாமாய் வானுய்
    ஒன்றினுங்கடை தோயா மாயோன்—மருகோனே
ஒண் தடம்பொழில் நீடூர் கோடூர்
    செந்தி லம்பதி வாழ்வே, வாழ்வோர்
    உண்ட நெஞ்சறி தேனே வானோர்—பெருமாளே 605

அஞ்சுவித பூத மும்கரண நாலும் அந்திபகல் யாதும்—அறியாத
அந்த நடுவாதி ஒன்றும் இலதான அந்த ஒருவீடு—பெருமாறு,
மஞ்சு தவழ் சாரல் அஞ்சயில வேடர் மங்கை தனைநாடி—வனமீது
வந்த சரணுர விந்தமது பாட வண்டமிழ் விநோதம்—அருள்வாயே
குஞ்சர கலாப வஞ்சியபிராம குங்கும படீர—அதிரேகக்
கும்ப தனமீது சென்றணையு மார்ப குன்று தடுமாற—விடுகோப
வெஞ்சமர சூர னெஞ்சுபக வீர வென்றி வடிவேலை—விடுவோனே
விம்பமதில் சூழு நிம்ப புரவாண விண்டல மகிபர்—பெருமாளே

கருவின்உரு வாகி வந்து வயதளவி லேவளர்ந்து
கலைகள் பல வேதெரிந்து—மதனாலே
கரியகுழல் மாதர் தங்கள் அடிசுவடு மார்புதைந்து
கவலைபெரி தாகி நொந்து—மிகவாடி
அரகர சிவாயவென்று தினமுநினை யாமல்நின்று
அறுசமய நீதி ஒன்றும் அறியாமல்,
அசனமிடு வார்கள் தங்கள் மனைகள் தலை வாசல்நின்று
அநுதினமும் நாணமின்றி—அழிவேனோ ?
உரகபட மேல்வளர்ந்த பெரியபெருமாள் அரங்கர்
உலகளவு மால்மகிழ்ந்த—மருகோனே
உபயகுல தீபவங்க விருதுகவி ராஜசிங்க
உறை புகலி யூரி லன்று—வருவோனே
பரவைமனை மீதி லன்று ஒருபொழுது தூதுசென்ற
பரமனரு ளால்வளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனைகொன்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதில் நின்ற—பெருமாளே

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைத்தி யானம் வைக்க—அறியாத
சடகசடமூட மட்டி பலவினையிலே சனித்த
தமியன்மிடி யால்மயக்கம்—உறுவேனோ
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர்பெற்ற—குமரோனே
கடகபுய மீதிரத்ன மணியணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்கடப்பம்—அணிவோனே
தருணமிதையா மிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோக மிக்க—பெருவாழ்வு
தகைமை சிவ ஞான முத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணும் நெய்த்த—வடிவேலா
அருணதள பாதபத்மம் அநுதினமு மே துதிக்க
அரியதமிழ் தானளித்த —மயில்வீரா
அதிசயமநேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழக, திருஏரகத்தின்—முருகோனே.

சந்தனந் திமிர்ந்தணைந்து
குங்குமங் கடம்பி லங்கு
சண்பகம் செறிந்திலங்கு—திரடோளும்
தண்டையஞ் சிலம்பலம்ப
வெண்டையஞ் சலஞ்சலென்று
சந்ததம் சதங்கை கொஞ்ச—மயிலேறி

திந்திமிந் திமிந்திமிந்தி
தந்தனந் தனந்தனென்று
சென்றசைந் துகந்து வந்து—க்ருபையோடே
சிந்தையங்குலம்புகுந்து
சந்ததம் புகழ்ந்துணர்ந்து
செம்பதம் பணிந்திரென்று—மொழிவாயே 610

அதிருங் கழல்பணிந்துன் அடியேனுன்
அபயம் புகுவதென்று—நிலேகாண
இதயந் தனிலிருந்து க்ருபையாகி
இடர்சங்கைகள் கலங்க—அருள்வாயே
எதிரங் கொருவரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கில்—உமைபாலா
பதியெங் கிலுமிருந்து விளேயாடிப்
பலகுன் றிலும் அமர்ந்த—பெருமாளே

முந்து தமிழ்மாலே கோடி கோடி
சந்தமொடு நிடு பாடிப் பாடி
முஞ்சர் மனேவாசல் தேடித் தேடி—உழலாதே
முந்தை வினேயேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனே யாளத் தானு—முனேமீதே
தந்தி திமி தோதி திதித் திதி
தந்த தனதான தானத் தான
செஞ்சணகு சேகு தாளத் தோடு—நடமாடும்
செஞ்சிறியகால் விசாலத் தோகை
துங்க அனுகூல பார்வைத் திர
செம்பொன் மயில்மீதிலே எப்போது—வருவாயே

வந்து வந்து முன்தவழ்ந்து
வெஞ்சுகந் தயங்க நின்று
மொஞ்சி மொஞ்சி என்றமும்—குழந்தையோடு
மண்டலம் குலுங்க அண்டர்
விண்டலம் பிளந் தெழுந்த
செம்பொன் மண்ட பங்களும்—பயின்ற விடு
கொந்தளேந்த குந்தளந்த
ஞைந்துகுங்கு மந்தயங்கு
கொங்கைவஞ்சி தஞ்சமென்று—மயங்கு காலம்
கொங்கடம்பு கொம்புபொங்கு
பைங்கடம்பு தண்டை கொஞ்ச
செஞ்சதங்கை தங்கு பங்க—யங்கள் தாராய்

ஆனை முகவற்கு நேரிளைய சுத்த ஆறு முகமுற்ற—அழகோனே,
ஆதி அரனுக்கும் வேதமுதல்வற்கும் ஆரணம் உரைத்த—குருநாதா
தானவர் குலத்தை வேல்கொடு துணித்த சார சதுர்மிக்க—விறல்வீரா
தாளிணைக ளுற்று மேவிய பதத்தில் வாழ்வொடு சிறக்க—அருள்வாயே

இசைந்த ஏறும் கரியுரி போர்வையும்—எழில்நீறும்
இலங்கு நூலும் புலியதழ் ஆடையும்—மழுமானும்
அசைந்த தோடுஞ் சிரமணி மாலையு—முடிமீதே
அணிந்த ஈசன் பரிவுடன் மேவிய—குருநாதா
உசந்த மாறன் பதிமிகு கூடலில்—உறைவோனே
உகந்தபாசக் கயிறெடு தூதுவர்—நலியாதே.
அசைந்தபோதென் துயர்கெட மாமயில்—வரவேணும்
அமைந்த வேலும் புயமிசை மேவிய—பெருமாளே

இத்தரணி மீது—பிறவாதே எத்தரொடுகூடிக்—கலவாதே
முத்தமிழை ஓதித்—தளராதே முத்தியடியேனுக்—கருள்வாயே
தத்துவமெஞ்ஞான—குருநாதா சத்தசொருபாபுத்—தமுதோனே
நித்தியக்ருபாநற்—பெருவாழ்வே நிர்த்த ஜகஜோதி—பெருமாளே

துள்ளு மதவேள்கைக்—கணையாலே தொல்லை நெடுநீலக்—கடலாலே,
மெள்ள வருசோலைக்—குயிலாலே மெய்யுருகு மானைத்—தழுவாயே
தெள்ளு தமிழ்பாடத்—தெளிவோனே செய்ய குமரேசத்-திறலோனே
வள்ளல் தொழு ஞானக்-கழலோனே வள்ளி மணவாளப்-பெருமாளே

இருவினையின் மதிமயங்கித்—திரியாதே
எழுநரகில் உழலுநெஞ்சுற்—றலையாதே
பரமகுரு அருள்நினைந்திட்—டுணர்வாலே
பரவுதரி சனையை யென்றற்—கருள்வாயே
தெரிதமிழை யுதவுசங்கப்—புலவோனே
சிவனருளு முருகசெம்பொற்—கழலோனே
கருணை நெறி புரியுமன்பர்க்—கெளியோனே
கனகசபை மருவுகந்தப்—பெருமாளே

ஊனுந் தசையுடல் தானௌன் பதுவழி ஊறும் கருவழி—ஒருகோடி,
ஓதும் பலகலை கிதம் சகலமும் ஒரும் படியுன—தருள்பாடி
நானுன் திருவடி பேணும்—படியிரு போதுங் கருணையில்-மறவாதுன்
நாமம் புகழ்பவர் பாதம் தொழவினி நாடும் படியருள்—புரிவாயே.

ஊனே தானா ஓயா நோயால் ஊசா டேசற்—குடில் பேணு
ஓதா மேதா வாதா காதே லோகா சாரத்—துளம் வேறாய்
நானே நீயாய் நீயே நானாய் நானா வேதப்—பொருளாலும்
நாடா வீடா யீடே றாதே நாயேன் மாயக்—கடவேனோ ?

வானே காலே தீயே நீரே பாரே பாருக்—குரியோனே
மாயா மானே கோனே மானுர் வாழ்வே கோழிக்—கொடியோனே
தேனே தேனீள் கானு ருய்வீழ் சீரா ரூரிற்—றிருவான
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப்—பெருமாளே.

எருவாய் கருவாய் தனிலே யுருவா யிதுவே பயிராய்—விளைவாகி
இவர்போ யவரா யவர்போ யிவராய் இதுவே தொடர்பாய்-வெறிபோல
ஒருதாய் இருதாய் பலகோடியதாய் உடனே அவமாய்—அழியாதே
ஒருகால் முருகா பரமா குமரா உயிர்கா எனவோ—தருள்தாராய்

ஐந்து பூதமும் ஆறு சமயமும்
மந்த்ர வேத புராண கலைகளும்
ஐம்ப தோர்வித மான லிபிகளும்—வெகுருப
அண்டராதி சராசரமும் உயர்
புண்டரீகனு மேகநிறவனும்
அந்தி போலுரு வானும் நிலவொடு—வெயில் காலும்

சந்த்ர சூரியர் தாமும் அசபையும்
விந்து நாதமு மேக வடிவம
தன்சொருபம தாக உறைவது—சிவயோகம்
தங்க ளாணவ மாயை கரும
மலங்கள் போயுபதேச குருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது—பெறுவேனே.....

ஒழுகூன் இரத்த மொடுதோல் உடுத்தி
உயர்கால் கரத்தின்—உருவாகி,
ஒருதாய் வயிற்றி னிடையே உதித்து,
உழல் மாயமிக்கு—வருகாயம்
பழகா விருப்பொ டணையா ரிடத்திற்
பரிதாப முற்று மடியாமுன்
பரிவால் உளத்தில் முருகா எனச்சொல்
பகர்வாழ் வெனக்கு—மொழிவாயே......

ஒருவரொடு கண்கள் ஒருவரொடு கொங்கை
ஒருவரொடு செங்கை உறவாடி,
ஒருவரொடு சிந்தை, ஒருவரொடு நிந்தை
ஒருவரொ டிரண்டு—முரையாரை
மருவ மிக அன்பு பெருக உளதென்று
மனநினையு மிந்த—மருள்தீர
வனச மென வண்டு தனதனன என்று
மருவு சரணங்கள்—அருளாயோ ? 625

காவியுடுத்தும் தாழ்சடை வைத்தும் காடுகள் புக்கும்-தடுமாறிக்
காய்கனி துய்த்தும் காய மொறுத்தும் காசினி முற்றும்-திரியாதே
சிவனெடுக்கம் பூத ஒடுக்கம் தேற உதிக்கும்-பரஞான
தீப விளக்கம் காண எனக்குன் சீதள பத்மம்-தருவாயே.

குமர குருபர முருக சரவண குகசண் முககரி பிறகான
குழக சிவசுத சிவயநமவென குரவன் அருள்குரு-மணியே என்று
அமுத இமயவர் திமிர்த மிடுகடல் அதென அநுதினம்-உனையோதும்
அமலை அடியவர் கொடிய வினைகொடும் அபய மிடுகுரல்-அறியாயோ ?

கனக சபை மேவும் எனது குருநாத
கருணை முருகேசப்-பெருமாள் காண்
கனக நிறவேதன் அபயமிட மோது
கரகமலச் சோதிப்—பெருமாள்காண்
வினவும் அடியாரை மருவி விளையாடும்
விரகரசமோகப்—பெருமாள்காண்
விதி முனிவர் தேவர் அருணகிரி நாதர்
விமலசுரர் சோதிப்—பெருமாள்காண்

சுருதி யூடு கேளாது சரியையாளர் காணாது
துரியமீது சாராது—எவராலும்
தொடரொணாது மாமாயை இடைபுகாது ஆனாத
சுகமகோத தியாகி—ஒழியாது,
பருதி காயில் வாடாது, வடவை மூளில் வேகாது
பவனம் வீசில் வீழாது—சலியாது
பரவை சூழில் ஆழாது, படைகள் மோதில் மாயாது,
பரம ஞான வீடேது—புகல்வாயே ?
நிருதர் பூமி பாழாக மகரபூமி தீமூள
நிபிட தாரு காபூமி—குடியேற
நிகரபார நீகார சிகரமீது வேலேவு
நிருப வேத ஆசாரி—யனுமாலும்
கருதும் ஆக மாசாரி கனக கார்மு காசாரி
ககனசாரி பூசாரி—வெகுசாரி
கயிலைநாட காசாரி சகலசாரி வாழ்வான
கருணை மேருவே தேவர்—பெருமாளே.

சிவனார் மனம் குளிர உபதேச மந்த்ரம் இரு
செவிமீதி னும் பகர்செய்—குருநாதா
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலே விரும்பியுளம்—நினையாமல்

அவமாயை கொண்டுலகில் விருதா வலைந்துழலும்
அடியேனை அஞ்சலென—வரவேணும்
அறிவாகமும் பெருக இடரானதுந் தொலைய
அருள்ஞான இன்பமது—புரிவாயே.... 620

நாவேறு பாமணத்த பாதார மேநினைந்து
நாலாறு நாலுபற்று—வகையான
நாலாரு மாகமத்தின் நூலாய ஞானமுத்தி
நாடோறு நான் நினைந்து—நெறியாக
நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க,
நேராக வாழ்வதற்குன்—அருள்கூர,
நீடார் ஷடாக்ஷரத்தின் மீதே பராபரத்தை
நீகாண்எனு வனைச்சொல்—அருள்வாயே

பக்குவ ஆசார லட்சண சாகாதி பட்சண மாமோன-சிவயோகர்
பத்தியி லாருறு தத்துவ மேல்வீடு பற்று நிராதார-நிலையாக
அக்கண மேமாய துர்க்குணம் வேருக அற்புத மாஞான-உபதேசம்
அக்கற வாய்பேசு சற்குரு நாதாவுன் அற்புத சீர்பாத-மறவேனே

பாதி மதிநதி போதுமணிசடை நாதன் அருளிய-குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள் பாதம் வருடிய-மணவாளா
காதும் ஒருவிழி காகம் உறஅருள் மாயன் அரிதிரு-மருகோனே
காலன் எனையணு காமல் உனதிரு காலில் வழிபட-அருள்வாயே.

மலடி வயிற்று மகன்போலே—ஒரு
புதையல் எடுத்த தனம்போலே—ஒளிர்
வயிரம் அடித்த கனம்போலேஇள—முலைமாதர்
வலிய அணைத்த சுகம்போலே—கதிர்
ஒளிவிடு ரத்ன வடம்போலே—எழு
பரிமள புஷ்ப வனம்போலே சுர—நதிபோலே
அலைகடல் பெற்றருள் பெண்போலே—வரு
புதல்வர் தமக்கிரு கண்போலே—கரை
அருகில் எடுத்த சலம்போலே உன—தழகாமோ
அமுது பொசித்த ரசம்போலே—திரை
கடல்மடைவிட்ட சலம்போலே—தினம்
அதிசய முத்தமிழ் அன்பாய் ஓதவுன்—அருள்தாராய்.

நாத விந்து கலாதி நமோ நம
வேத மந்த்ரசொ ரூபா நமோ நம
ஞான பண்டித சாமீ நமோ நம—வெகுகோடி

ஞான சம்புகு மாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோ நம
நாக பந்தம யூரா நமோ நம—பரசூரா
சேத தண்ட விநோதா நமோ நம
கித கிண்கிணி பாதா நமோ நம
திர சம்பரம வீரா நமோ நம—கிரிராஜா
திப மங்கள ஜோதி நமோ நம
தூய அம்பல சீலா நமோ நம
தேவ குஞ்சரி பாகா நமோ நம—அருள்தாராய்
ஈதலும் பல கோலால பூஜையும்
ஓதலும் குண ஆசார நீதியும்
ஈரமும் குரு சீர்பாத சேவையும்—மறவேனே
ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக—வயலூரா
ஆதரம்பயில் ஆரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடேமுன் நாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி—லையிலேகி
ஆதி அந்த வுலா ஆசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனுடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள்—பெருமாளே. 635

## 18. பாமாலை

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொருள் நல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே

வென்றுளே புலன்க ளைந்தார் மெய்யுணர் உள்ளந் தோறும்
சென்றுளே அமுதம் ஊற்றும் திருவருள் போற்றி ; ஏற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி கொடுத்திடும் கோலம் போற்றி
மன்றுளே மாறி ஆடும் மறைச்சிலம் படிகள் போற்றி !

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்கள் எங்கும் பரவுக அறங்கள் ; இன்பம்
நல்குக வுயிர்கட் கெல்லாம் நான்மறைச் சைவம் ஓங்கிப்
புல்குக உலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க !

உண்மையறி வானந்த உருவாகி எவ்வுயிர்க்கும் உயிராய், நீரின்
தண்மை அனல் வெம்மையெனத் தனையகலா திருந்துசரா சரங்களீன்ற
பெண்மையுரு வாகியதன் ஆனந்தக் கொடிமகிழ்ச்சி பெருக யார்க்கும்
அண்மையதா யம்பலத்துள் ஆடியருள் பேரொளியை அகத்துள் வைப்
[பாம்!

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வர்க்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை
வெல்வாம். (பரஞ்சோதி முனிவர்) 640

உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோமமாகுந் திருச்சிற்றம் பலம்பலத்து ணின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி ! (சேக்கிழார்.)

அறுவகைச் சமயத் தோர்க்கும் அவரவர் பொருளாய் வேறும்,
குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியிறந்தங்(கு)
அறிவினில் அருளால் மன்னி அம்மையோ டப்ப னுகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம் !

ஒருவனே டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலக மெல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே
தருபவன் ஒருவன் வேண்டும் ; தான்முதல் ஈறு மாகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே (சித்தியார்) 645

ஊனுகி யூனுள் உயிராகி உயிர் தோறுமாகி
வானுதி யானபொருளாய் மதியாகி வெய்யோன்
தானுகி ஆண்பெண் உருவாகிச் சராசரங்கள்
ஆனன் சிவன் மற்றவன் நீள்கழற்கு அன்புசெய்வாம் !

பிறப்பதும் இறப்பதும் பெயரும் செய்கையும்
மறப்பது நினைப்பதும் வடிவம் யாவையும்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யானடி சென்னி சேர்த்துவாம்.

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொரு ளெலாம் எளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

தாவறு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் துணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதோ றிருந்திடு நலங்கொள் வாணியின்
பூவடி முடிமிசை புனைந்து போற்றுவாம்.

நாரணன் என்னுந் தேவு நான்முகத் தவனும் முக்கட்
பூரணன் தானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி,
ஆரண முடிவுந் தேரு அனுதியாய் உயிர்கட் கெல்லாம்
காரண னுப மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்! (கச்சியப்பர்) 650

உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்
நிலை பெறுத்தலு நீக்கலு நீங்கலா
அலகிலா விளை யாட்டுடையார் ; அவர்
தலைவர் ; அன்னவர்க்கே சரண் யாங்களே !

மூப்பரம் பொருளிற்குள் முதலை, மூலத்தை
இப்பரந் துடைத்தவர் எய்தும் இன்பத்தை,
அப்பனை அப்பினுள் அமிழ்தந் தன்னையே
ஒப்பனை, ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ ?
சாங்கியம் யோகமென் றிரண்டு தன்மைய
வீங்கிய பொருளெலாம் வேறு காண்பன
ஆங்கவை உணர்ந்தவர்க் கன்றி அன்னவன்
ஓங்கிய தனிநிலை உணரற் பாலதோ ?

நின்னிற் பிறிதாய் நிலையில் திரியாத்
தன்னிற் பிறிதா யினதாம் எனினும்
உன்னிற் பிறிதா யினவோ உலகம்
பொன்னிற் பிறிதா கிலபொற் கலனே.

தன்னுளே உலகங்கள் எவையுந் தந்தவை
தன்னுளே நின்றுதான் அவற்றுள் தங்குவான்.
பின்னிலன் முன்னிலன் ஒருவன் பேர்கிலன்
தொன்னிலை ஒருவரால் துணியற் பாலதோ ? 655

ஒன்றே என்னின் ஒன்றேயாம் பலவென் றுரைக்கிற் பலவேயாம்
அன்றே என்னின் அன்றேயாம் ஆமென்றுரைக்கின் ஆமேயாம் ;
இன்றே என்னின் இன்றேயாம் உளதென்றுரைக்கின் உளதேயாம்
நன்றே நம்பி குடிவாழ்க்கை நமக்கிங் கேனே பிழைப்பம்மா !

பாதாம் புயத்திற் பணிவார் தமக்குப் பலகலையும்
வேதாந்த முத்தியும் தந்தருள் பாரத வெள்ளிதழ்ப்பூஞ்
சீதாம் புயத்தில் இருப்பாள் இருப்பளன் சிந்தையுள்ளே
ஏதாம் புவியிற் பெறலரிதாவ தெனக்கினியே (கம்பர்)

மூவா முதலா வுலகம் ஒரு மூன்றுமேத்தத்
தாவாத இன்பந் தலையாயது தன்னினெய்தி
ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வனென்ப
தேவாதி தேவன் அவன் சேவடி சேர்ந்துமன்றே. (திருத்தக்கதேவர்)

நீடாழி உலகத்து மறைநாலொடு ஐந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதம் சொன்னநாள்
ஏடாக மாமேரு வெற்பாக வெங்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ?

ஏழ்பெருங் கடல் மாநிலம் எங்குநல் லறமே
சூழ்க வண்டமிழ் ஓங்குக தேங்குக சுருதி.
வீழ்க பைம்புயல் விளங்குக வளங்கெழு மனுநூல்
வாழ்க அன்புடை யடிய்வர் மன்னு மாதவமே! 660

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே யிருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று, கற்றோர் நினைவிலே நடந்தோர் ஏன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கலே வளர்கின் றுளே.

அருமறை முதல்வனை ஆழி மாயனைக்
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்
திருமகள் தலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்.

வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொருளும்
அப்பொருள் விதங்களும், பஞ்ச
பூதமும் புலனும் புலன்களின் பயனும்,
அப்பயன் பொலிவுற நுகரும்
நாதமும், உலகம் படைத்தளித் தழித்து
ஞானமாய் அகிலமு நிறைவுற்று,
ஆதியு நடுவு முடிவுமாய் நின்ற
ஆதியான் அடியிணை பணிவாம்!

பேர்படைத்த விசயனுடன் மும்மைநெடும்
பிறவியினும் பிரியா னுகிச்
சீர்படைத்த கேண்மையினுல் தேரூர்தற்
கிசைந்தருளும் செங்கண் மாலைப்

பார்படைத்த சுயோதனற்குப் படையெடேன்
அமரில் எனப் பணித்தகோவைக்
கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார்
பிறவாழி கரைகண் டாரே !

மேவரு ஞானா னந்த வெள்ளமாய் விதித்தோ னாகி
மூவரு மாகி அந்த மூவர்க்கு முதல்வ னாகி,
யாவரும் யாவு மாகி இறைஞ்சுவார் இறைஞ்சப் பற்பல 665
தேவரு மாகி நின்ற செங்கண்மால் எங்கள் கோவே (வில்லிபுத்தூரார்)

## 19. திருமந்திரம்

நான் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்,
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான் பற்றப்பற்றத் தலைப்படுந் தானே.

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணுகாப் பசு பாசம்
பதி யணுகிற் பசு பாசம் நில்லாவே.

வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனும்
கோயி லிருந்து குடிகொண்ட கோன் நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎனுந்
தோயம தாயெழும் சூரிய னாமே.

தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருளறி வார்இல்லை.
சேயினும் நல்லன் அணியன் நல் அன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே.

சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலே
சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா ;
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
சூரியன் தோற்றமுன் அற்றன மலங்களே. 670

அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றுகு மாறுபோல்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே,

ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின் ;
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே !

படமாடும் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடுங் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடுங் கோயில் பகவற்க தாமே !

தன்னது சாயை தனக்குத வாது கண்டு
என்னது மாடென் றிருப்பர்கள் ஏழைகள் ;
உன்னுயிர் போம்உடல் ஒக்கப் பிறந்தது
கண்ணது காண்ஒளி கண்டுகொ ளீரே.

கொலையே களவுகட் காமம் பொய்கூறல்
மலைவான பாதகமாம் அவை நீக்கித்
தலையாம் சிவனடி சார்ந்தின்பம் சார்ந்தோர்க்கு
இலையாம் இவை ; ஞானனந்தத் திருத்தலே. 675

ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே.

பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து,
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான கிரியை யிருந்து
சொருபம தானோர் துகளில் பார்ப்பாரே.

செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராமல்,
இல்லங் கருதி இறைவனை ஏத்துமின் ;
வில்லி இலக்கெய்த விற்குறி யாமே.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

நடுவுநின் ருர்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் ருர்க்கு நரகமும் இல்லை.
நடுவுநின் ருர்நல்ல தேவரும் ஆவார்.
நடுவுநின் ருர்வழி நானும்நின் றேனே. 680

உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே.

குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக் கூட்டிட்டால்
அயர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்
இயக்கில்லை போக்கில்லை ஏன்என்ப தில்லை
மயக்கத்தாற் காக்கை வளர்க்கின்ற வாறே.

இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணாயாமம் பிரத்தியா காரம்
சயமிகு தாரணை தியானம் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே.

அந்நெறி இந்நெறி என்னா தட்டாங்கத்
தன்னெறி சென்று சமாதியிலே நின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே.

கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லான் இயமத் திடையின் நின்றானே 690

தபம்செபம் சந்தோடம் ஆத்திகந் தானம்
சிவன் றன்விரதமே சித்தாந்தக் கேள்வி
மகம்சிவ பூசை ஒண்மதி சொல்லீர் ஐந்து
நிவம்பல செய்யின் நியமத்த னாமே.

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே.

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட உள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே

நாசிக்கு அதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தமா யோகம் வந்து தலைப்படும்
தேகத்துக் கென்றும் சிதைவில்லை தானே.

கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாதண் டூடே வெளியுறத் தானோக்கிக்
காணாக்கண் கேளாச்செவி யென்றிருப் பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே. 695

எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதினைக் கண்டறி வாரில்லை
உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினால்
கண்ணாடி போலக் கலந்துநின் றானே.

விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்.
அந்தமி லாத அறிவின் அரும்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே.

உடம்பார் அழியில் உயிரார் அழிவார்.
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே.

அண்ணல் இருப்பிடம் ஆரும் அறிகிலர்
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வார்களுக்கு
அண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்
அண்ணலைக் காணில் அவனிவ னாமே.

வெள்ளி யுருகிப் பொன்வழி ஓடாமே
கள்ளத் தட்டானார் கரியிட்டு மூடினார்.
கொள்ளி யறியக் குழல் வழியே சென்று
வள்ளியுண் ணாவில் அடக்கிவைத் தாரே. 700

எல்லாக் கலையும் இடைபிங் கலைநாடிச்
செல்லா நடுநாடி யூடே தொடர்மூலம்
செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் பாரே.

சத்தியி னோடு சயம்புவும் நேர்படில்
வித்தது இன்றியே எல்லாம் விளைந்தன.
அத்தகை யாகிய ஐம்பத் தொருவரும்
சித்தது மேவித் திருந்திடு வாரே.

நாடு நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வானே

கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே

பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சிவனுக் குள்ளே சிவமணம் பூத்தது.
ஒவியம் போலே உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே. 705

உள்ளத்தும் உள்ளன் ; புறத்துள்ளன் என்பவர்க்கு
உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் எம்மிறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்கு
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே.

ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையு மில்லை இராப்பக லில்லை
படும்பய னில்லை பற்றுவிட் டோர்க்கே.

அருட்கண்ணி லாதார்க்கு அரும்பொருள் தோன்று
அருட்கண்ணு ளோர்க் கெதிர் தோன்றும் அரனே
இருட்கண்ணி னோர்க்கங்கு இரவியும் தோன்றுத்
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சிரொளி யாமே

வித்தினி லன்றி முளையில்லை அம்முளை
வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
அத்தன்மை யாகும் அறநெறி காணுமே.

சிவனெனச் சிவ னென்னவே றில்லை
சிவனார் சிவ னுரை அறிகிலர்
சிவனார் சிவ னுரை அறிந்தபின்
சிவனார் சிவ னுயிட் டிருப்பரே. 710

## 20. *திருக்குறள்*

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு.
அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த ; புகழும் இல.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.
வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்
அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 715
மங்கல மென்ப மனையாட்சி மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு.
அன்பின் வழிய துயர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.
தன்னெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.
உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்.
பிறர் நாணத் தக்கது தான்நாணு னாயின்
அறம்நாணத் தக்க துடைத்து. 720
அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.
யாகாவா ராயினு நாகாக்க ; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.
ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.
நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினு மாணப் பெரிது.
செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. 725
காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.
நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.
கொல்லா நலத்தது நோன்மை ; பிறர்திமை
சொல்லா நலத்தது சால்பு.
ஊழி பெயரினுந் தாம் பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்,
இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 730
சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு ?
சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் ; அவனை
இகல் வெல்லல் யார்க்கும் எளிது .
அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.
மறந்தும் பிறன்கேடு சூழற்க ; சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு. 735
தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று.
அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கினுங் கேடீன் பது.
உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வேம் எனல்.
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க ; காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.
இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநிக்கப் பட்டார் தொடர்பு. 740
கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்.
தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை.
இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்
அமரகத் தாற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரிற் றனிமை தலை.
கனவிலும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 745
நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகு மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகு மறிவு.
நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.
முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.
அருளில்லார்க் கவ்வுலக மில்லை ; பொருளில்லார்க்கு
இவ்வுலக மில்லாகி யாங்கு.
அருட் செல்வம் செல்வத்துட் செல்வம் ; பொருட் செல்வம்
பூரியார் கண்ணும் உள. 750

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் ; பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்
மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.
நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணுமை பேதை தொழில்.
ஒத்த தறிவான் உயிர்வாழ்வான்; மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.
உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். 755
விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்ருரோடு ஏனை யவர்.
கண்ணுடைய ரென்பவர் கற்ருேர் ; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.
தொட்டனைத் தூறும் மணற்கேணி ; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.
கற்கக் கசடறக் கற்பவை ; கற்றபின்
நிற்க அதற்குத் தக.
செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். 760
எனைத்தானு நல்லவை கேட்க ; அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.
எப்பொருள் யாவர்வாய் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.
எவ்வ துறைவ துலகம் உலகத்தோடு
அவ்வ துறைவ தறிவு.
அறிவுடையார் எல்லாம் உடையார் ; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.
ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலர் கண்ணே உள. 765
கண்ணெடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல.
தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.
காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.
மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன் றுண்டு.

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு. 770
உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்துக் குண்டு.
ஊடுதல் காமத்திற் கின்பம் ; அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.
பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிரப்பான் கண்.
நகையீகை இன்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.
நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் ; குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. 775
பணியுமாம் என்றும் பெருமை ; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.
கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையிற் பீடுடைய தில்.
செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.
இல்லாரை எல்லாரும் எள்ளுவர் ; செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு.
இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னு நல்லாள் நகும். 780
உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.
முயற்சி திருவினை யாக்கும் ; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.
தெய்வத்தால் ஆகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.
உள்ள முடைமை யுடைமை ; பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.
வெள்ளத் தனைய மலர்நீட்டம் ; மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. 785
தோன்றிற் புகழொடு தோன்றுக ; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.
ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.
கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ வுலகு ?

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.
பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றுற் செல்வம்
நயனுடை யான்கட் படின். 790
இடனிற் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.
கருமஞ் சிதையாமற் கண்ணோட்ட வல்லார்க்கு
உரிமை யுடைத்திவ் வுலகு.
மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.
பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.
உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு. 795
என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.
எற்றென் றிரங்குவ செய்யற்க ; செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.
ஈன்றாள் பசிக்காண்பா ளுயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.
எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.
சொல்லுதல் யார்க்கும் எளிய ; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல். 800
துன்ப முறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.
பொருள்கருவி காலம் வினையினெ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்.
ஆக்கங் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.
அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றுக் கெடும்.
ஞாலங் கருதினுங் கைகூடும் ;காலம்
கருதி இடத்தாற் செயின். 805
கொக்கொக்க கூம்பும் பருவத்து ; மற்றதன்
கொத்தொக்க சீர்த்த இடத்து.
அஞ்சாமை யல்லால் துணைவேண்டா, எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின்.

குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.
பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தந்தம்
கருமமே கட்டளைக் கல்.
இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல். 810
கூற்றுடன்று மேல்வரினுங் கூடி எதிர்க்கும்
ஆற்ற லதுவே படை.
இன்பத்து ளின்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்.
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.
இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.
வாள்போற் பகைவரை அஞ்சற்க ; அஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு. 815
அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை யுற்ற குடி.
உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.
இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்ப முறுதல் இலன்.
தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.
குன்றின் அனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். 820
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.
ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.
அற்ற மறைக்கும் பெருமை ; சிறுமை
குற்றமே கூறி விடும்.
பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.
இருவே றுலகத் தியற்கை ; திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. 825
வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தாலுந் துய்த்த லரிது.

நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை,
கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்;
போக்கும் அதுவிளிந் தற்று.
குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு
உறங்குவது போலும் சாக்காடு. உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 830
பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணுப் பிறப்பு.
எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.
காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக் கெடும் நோய்.
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவார்
மற்றீண்டு வாரா நெறி.
வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும். 835
மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்.
வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை;
யாண்டும் அஃதொப்ப தில்.
தூஉய்மை என்ப தவாவின்மை; மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.
இன்பம் இடையறு திண்டும்; அவாவென்னுந்
துன்பத்துட் டுன்பம் கெடின்.
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும். 840
தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.
சுடச்சுடப் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோக்கிற் பவர்க்கு.
கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.
யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.
அடல்வேண்டும் ஐந்தன்; புலனை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு. 845

யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.
பற்றுக பற்றற்றான் பற்றினை ; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.
வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை யில.
மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்!

## 21. ஔவை ஞானம்

உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினில் உத்தமனைக் காண்.
மாசற்ற கொள்கை மனத்தி லடைந்தக்கால்
ஈசனைக் காட்டு முடம்பு.
அறிந்தடங்கி நிற்குமந் நாடிகள் தோறும்,
செறிந்தடங்கி நிற்கும் சிவம்.
வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கில்
ஆயுட் பெருக்கமுண் டாம்.
எரியுங் கழல்போல உள்ளூற நோக்கிற்
கரியுங் கனலுருவ மாம்.
உள்ளமே பீடம் உணர்வே சிவலிங்கந்
தெள்ளியர் அர்ச்சிக்கு மாறு.
உள்ளத்தி னுள்ளே உறப்பார்த்தங் கொண்கடரை
மெள்ளத்தான் அர்ச்சிக்கு மாறு.
ஞானத்தா லாய உடம்பின் பயனன்றே
மோனத்தா லாய வுணர்வு.
ஈசன் எனக்கருதி எல்லா உயிர்களையும்
நேசத்தால் நீநினைந்து கொள்.
வாய்மையால் பொய்யா மனத்தினால் மாசற்ற
தூய்மையாம் ஈச னருள்.
எல்லாப் பொருளு முடிக்கலாம் ஈசன்றன்
தொல்லை யருள்பெற்றக் கால்.
நித்தம் நினைத்திரங்கி நின்மலனை ஒன்றுவிக்கில்
முற்றும் அவனொளியே யாம்.

கரும்பினிற் கட்டியுங் காய்பாலில் நெய்யும்
இரும்புண்ட நீரும் இயல்பு.
பழத்தில் இரதம்போற் பரந்தெங்கு நிற்கும்
வழுத்தினா லீசன் நிலை !
அச்சமாங் காரம் அகத்தடக்கி னாற்பின்னை
நிச்சயமாம் ஈசன் நிலை. 865
பெண்ணாண் அலியென்னும் பேரொன் றிலதாகி
விண்ணாகி நிற்கும் வியப்பு.
தனக்கோர் உருவில்லை தானெங்கு மாகி
மனத்தகமாய் நிற்கு மது.
தன்னை அறிந்து செறிந்தடங்கித் தானற்றால்
பின்னைப் பிறப்பில்லை விடு.
தன்பால் அறியுந் தவமுடையார் நெஞ்சகத்துள்
அன்பா யிருக்கும் அரன்.
மறவாமற் காணும் வகையுணர் வாருக்கு
இறவா திருக்கலு மாம். 870
சுத்தமோ டொன்றி மனமும் இறந்தக்கால்
முற்றும் அழியா துடம்பு.
மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவார் இறவார் பினை.

## 22. யோக சித்தி

எல்லா வுயிர்க்கும் இறைவன் ஒருவனே
எல்லா வுடலும் இறைவன் ஆலயமே.
ஓங்கார மாகி ஒளியாய் உயிர்க்குயிராய்
நீங்காதான் இன்ப நிறைவு.
உள்ளத்தான் ஓங்கும் உலகத்தான் பேரின்ப
வெள்ளத்தான் விண்ணின் விளக்கு. 875
எல்லாம் அவனுடைமை ; எல்லாம் அவனாணை
எல்லாம் அவன் ; பொதுவென் றெண்.
நேசம் பதிந்துள்ளே நின்றுருகி நெஞ்சாரப்
பேசினாற் பேசும் பிரான்.
வாய்மை நலனோன்பு வன்றொண் டடக்கமிவை
தூயவனைச் சேருந் துணை.
உயிர்மேனி யாக்கொண்டே ஓங்குமொரு சோதி
பயில்ஆ லயம்உலகு பார்.

பெண்ணின்றி ஆணில்லை ; ஆணின்றிப் பெண்ணில்லை ;
எண்ணிருவர் சேர்ந்தே இகம். 880
வினையுலகை அஞ்சாத வீரன்போல் வெல்க
மனவுறுதி யாலே மகிழ்ந்து.
மன்னு மனச்சாட்சி மன்னவன்சொல் என்னவென
உன்னி நடத்தல் உயர்வு.
அறமென் றறிந்ததனை அஞ்சாது செய்மின்
இறைவனருள் காக்கும் இனிது.
போக்கும் வரவும் பொழுதுமறி யோமதனால்
யாக்கையோ டேசெய் அறம். 885
சோர்வு விடுத்துச் சுயேச்சை யடைந்துலகில்
வீரனாய் வாழ விரும்பு.
அன்புண்மை யின்சொல் அடக்கம் பொறுமையருள்
இன்பப் பொதுநெறியென் றெண்.
எத்துணை நன்றெண்ணி இவ்வுலகிற் கன்புசெயல்
அத்துணை ஆன்மவிரி வாம்.
ஈசன் அருண்மொழியை எவ்வினத்தார் சொன்னாலும்
ஆசையுடன் கேட்ப தறிவு.
போக்குவர வற்ற பொருளான்மா ; நான் அது என்று
ஏக்கமற் றின்புற் றிரு. 890
நம்பு, நினை, முயல் ; நாடொருமை ; ஞானமாம்
இன்பம் பெருகும் இனிது.
கற்ற வழியாற்றக் கற்றேனே கற்றேனும்
மற்றவன் கற்ற மடம்.
வானும் விளைநிலனும் வாரிதியும் வெற்பும்போல்
ஞானகுரு செய்யு நலம்.
நாடிப் பணிந்தோதி நற்சேர்க்கைத் தொண்டுடனே
சீடன்மெய்க் கற்றல் சிறப்பு.
பாட்டும் பரதமும் பண்புள்ள நாடகமும்
நாட்டிற்கு நல்ல நலன். 895
அன்பே கடவுளாம் அன்பே அருஞ்சமயம்
அன்பே அறிவிற் கனி.
இன்சொல்லி னில்லை ; இயம்பின் இணங்காரின்
வன்சொல்லை மாற்று மருந்து.
இன்னாத செய்யாமை என்னும் ஒழுக்கத்தாம்
மன்னுயிர்க் கெல்லா மறை.
சீரியர் கேண்மை சிறிது கிடைத்தாலும்
ஆருயிர்க்கு நல்லமுதம் ஆம்.

வாய்மை பகையாமை மாட்சி மனப்பொறுமை
காய்வானைக் காயும் படை. 900
பொறுமை புவிவெல்லும் புன்னகையால் ; வாணப்
பொரிபோற் சினங்கரிந்து போம்.
தன்னடை போற்றுதான் சான்றுண்மை பேசுவதின்
மின்னைக் கரிஎழுதன் மேல்.
குற்றம் இரங்கிக் குறையற் றெழுமின்கள்
அற்றே நடையோங்கு மாறு.
வேரோ டொழிக விலைவாழ்வு ; வீட்டறத்திற்
சீரோடு பெண்டிர் சிறந்து.
நடையை மதியை நலத்தைப் புகழைக்
குடியைக் கெடுக்கும் குடி. 905
காதலரை நாயின் கதைகட்டிச் சீரழிக்கும்
பாதகரைப் பார்த்தல் பழி.
கற்கண்டு போற்பேசிக் காணுது தீவைப்பார்
மற்கொண்ட மாற்றாரிற் கேடு.
பக்குவத்திற் கேற்ற பயனுரையே பேசிடுக
மிக்கது மோனம் விரும்பு.
புறத்தூய்மை செய்யும் புனலைப்போல் உண்மை
மனத்தூய்மை செய்யு மருந்து.
சிந்தை யடக்கிச் சிறுபுலனைக் காத்தடக்கி,
விந்தை அடக்கிவளர் வீறு 910
வீட்டின் விரிவே வியனுலகம் ; ஆதலினுல்
வீட்டறத்தில் வெற்றி விளக்கு.
பூவொடு பொன்போற் பொருந்தி அறிவொளிரும்
ஆனோடு பெண்சக்தி யாம்.
காந்தமுளை மாறிக் கவர்வது போலுமே
மாந்தருள் ஆண்பெண் மயக்கு.
பகட்டணி கொள்ளாள் பதிக்கணி யாவாள்
அகத்திற்கு வாய்ந்ததிரு வாம்.
இல்லாளோ டன்புற் றிணங்கி அறங்காக்க
வல்லான் மணவாள னும். 915
கண்ணெத்த வீட்டிற் கனதன மங்கலமே
மண்ணெத்த வான்பயிரின் வாழ்வு.
இன்றுசேய் நாளையே இப்புவியின் கையாகும்
என்றுசேய் போற்றல் இனிது.
தேவை யறிந்து செழுமையுறப் பொன்செய்து
பூவையறிந் தில்லம் புரி.

கடன்செய் இடம்பம் கவலைக்குத் தூது ;
விடஞ்செய் வறுமைக்கு வித்து ;
மடவாய்நீர் போல வழிந்துபோம் செல்வம்;
உடையார் தருக உவந்து. 920
பசிக்குத் தொழிலும் பரமற்கு நெஞ்சும்
இசைக்கு வியன்செயலும் எண்.
முயல்க முயல்க முயல்கமேன் மேலும்
பயன்களைவைத் தீசன் பதம்.
நல்லவினை யேசூழ நாளு மிருப்பாயேல்,
பொல்லா வினையெல்லாம் போம்.
இவ்வுலகைப் போற்றி இயல்பான நல்லறஞ்செய்;
அவ்வுலகின் இன்பமெலாம் ஆம்.
கைத்தொழி லொன்றற்றார் கையிருந்துங் கையற்றார்
மெய்த்தொழிலின் வேர்வையெலாம் பொன். 925
காலத்தை வெல்லும் கருவி பலசெய்து,
ஞாலத்தி லேவெற்றி நாட்டு.
ஒருபயி ராக்கி உணவீவான் பாரிற்
பெருமகன் என்றுநீ பேசு.
அந்தந்த நாட்டிற் கமைந்தபயிர் செய்துண்ணல்
அந்தந்த நாட்டிற் கழகு.
புவிமகள் ஈந்தபயன் போதிய மட்டும்
அவரவர் துய்த்தல் அழகு.
போதைத் தொழிலாக்கிப் பொன்னைப் பொருளாக்கி
மேதைப் புகழை விரும்பு. 930
பொய்வஞ்சக் கள்ளர் பொருளைக் கவராது
தெய்வப் பணிக்கே திருப்பு.
பைதந்த செல்வம் பலருண்டு வேலைசெயக்
கைதந் திடவே கருது.
இயற்றுக காலம் இடம்வகை தேர்ந்தே ;
பயக்கும் பருவமழை போல்.
காக்கையிடம் பாட்டைக் கரக்கும் குயிலெனநீ
நாக்கடங்கி நன்முயற்சி செய்.
சங்கடம் போன்று சயமாம் திருவினைகள் ;
கங்குன் முதிரக் கதிர். 935
துணிந்துமுன் செல்க ; துயர்க்குலம் தானே
பணிந்துவெற் றிக்காம் படி.
பாருலக மெங்கெங்கும் பாரோர் உரிமையலால்
ஓரோர் உரிமையா மோ ?

இவனுயிரே யாகும் அவனுயிரும் என்னில்,
எவனடிமை ஆவதெவன் ஈங்கு ?
உள்ளத் துடிப்பில் உலகம் துடிப்பவரைத்
தெள்ளத் தெரிந்துடனே தேர்.
சிற்றூரில் தேயம் தெரியும் படியாண்டு
வற்று நிறைவு வழங்கு. 940
கல்வி தொழில்சுகம் காப்பு நலங்கருதி
மல்குவரி வான்போல் வழங்கு.
கூரை பிடுங்கிக் குளிர்காய் வதுபோலும்
பாரைப் பிடுங்கும் பரிசு.
நஞ்சப் பகைவர் நடுநடுங்கப் போர்புரியும்
அஞ்சாப் படைவலிமை யாக்கு.
வீரப் பயிற்சிமிக வேண்டிப் புலிநரிகள்
ஊரைக் கெடுக்கா தொழி.
கோதேறி ஞன்ஏறும் கொற்ற நெடுஞ்செருக்கு
மீதேறும் கற்போல் விழும். 945
பாரோடு வாழான் படைச்செருக்கு தன்னரசை
வேரோடு சாய்த்து விடும்.
நாந்திருந்தி மேலோங்க நாடும் திருவோங்கும்
தாந்தாம் திருந்தல் தலை.
ஒற்றுமையே பேராற்றல் ஒற்றுமையே வாழ் வின்பம்
ஒற்றுமையே வெற்றிக் குயிர்.
உள்ளொன்றி னுலே உலகொன்றும் ; ஆதலினல்
உள்ளத்தில் ஒற்றுமையை ஊன்று.
ஒன்றே உயிருலகம் ; ஒன்றே உலகிறைவன்
ஒன்றே இறைவனுறை யுள். 950
மானிடர் தெய்வத் திருக்கூட்ட வாழ்வடைவர்
ஆன்மவொருப் பாட்டுரிமை யால்.
ஓம்சுத்த சக்தியென உள்ளே உயிர்த்திடுமின்
ஆம்சித்தி சக்தியரு ளால்.
உடலுறுதி செய்க உடலொளி செய்க
உடலம் உயிர்மனையென் றுன்.
அற்றுப் பசிகண் டளந்துண் டியல்வழிநில்
குற்றமு றுதூன் குடில்.
தூயவுண தூய்நட்புத் தூயமனத் தூயருக்குக்
காயமும் கண்ணடி யாம். 955
தீய மனத்தாலும் திருவற்ற வாழ்வாலும்
நோய்பிறக்கும் என்றே நுவல்.

பூத வுடலுக்கைம் பூதமே நன்மருந்தாம்
பூதநிறை யெந்நாளும் போற்று.
உண்ணும் பணியை உடல்வாழ் பரமனுக்கே
பண்ணும் பணியாகப் பார்.
சுற்றும்பேய் நெஞ்சைச் சுருக்கிச் சுகவழியே
பற்றற்று நிற்கப் பயில்.
நினைத்து நினைத்து நினைப்பற்று நெஞ்சே
நினைப்பற்றி நீயாகி நில். 960
இயல்பான உன்னை இயல்பா யறிந்தே
இயல்பாகி இன்புற் றிரு.
பொன்னூற்றிற் பொங்கிப் பொலியும்வெண் தாமரைவாழ்
அன்னமென் றுன்னை அறி
ஆறுருவி ஏழேறி ஆனந்தத் தேனுண்ணும்
சீறிஎழும் ஆதாரத் தீ :
என்றும் இருப்பதனில் என்றும் இருப்பதுவே
என்றும் இருக்கும் இருப்பு.
என்றுந்தான் எல்லாந்தான் எங்குந்தான் சுத்தான்மா ;
பொன்றுவதும் உண்டோ புகல் ? 965
மனத்தில் அருண்மல்கி மானுலகம் உய்யும்
தனைத்துறந்த தொண்டே தவம்.
அழியாப் பொருளை அழியாது பற்றின்
அழியா அமரநிலை யாம்.
நாளாக நாளாக நாளான மாயம்போய்
ஆளாதல் ஈசற்கென் றும்.
சிரிப்பும் அழுகையும் சேர்ந்த மனமாயம்
அரிப்பும் எரிப்பும்போல் ஆம்.
தூசியிலா ஆடியிலே தோன்றுமுகம் போலான்மா
ஆசையிலா நெஞ்சகத்தே யாம். 97
தெய்வ ஒளிதனையே தேடு ; பிறவெல்லாம்
கைநழுவுங் காலத்திற் காண்.
இருக்கிறேன் ஈங்கென் றிதயத்தான் உன்னை
அழைக்கிறன். ஆங்கே யடை.
அருட்கோயில் சுற்றி அணியணியாய் மாந்தர்
திருத்தக்க வாழ்வமையச் செய்.
கண்ணைத் திறந்து கருணையொளி காட்டியருள்
உண்மைப் பரம்பொருளே ஓம்.
நடமாடும் கோயில்காள் ஞாலத் துயிர்காள்
கடவுட் குலமொன்றே காண். 975

இறைவன் அருட்குடைக்கீழ் எல்லாரும் இன்ப
நிறைவெய்தி வாழ்க நிதம்.
இதயம்பூ ; மந்திரம் இன் சொல் ; உன தன்பு
துதியாக வேயருளாய் தொண்டு.
இத்தல வட்டமெலாம் என்மனைபோல் தொண்டுசெயச்
சக்திக் கனலெனக்குத் தா.
நல்லறிஞ ரோங்க நலமோங்கிப் பூவெங்கும்
எல்லாரும் வாழ்க இனிது.

## 23. நாட்டு வாழ்த்து

மங்கல முரசு கொட்டி மாநிலம் போற்றி செய்யச்
செங்கதிர் போல ஞானச் சிரொளி பரப்பி எங்கும்
வெங்குலப் போர்க ளின்றி விடுதலை யின்ப மோங்கும்
பங்கயச் செல்வி யான பாரத சக்தி வாழ்க ! 980

ஓங்குநல் அறிவுச் செல்வம் உறுதிசெய் வீரச் செல்வம்
தீங்கறு தொண்டுச் செல்வம், செய்திருத் தொழிலின் செல்வம்,
தூங்கறு முயற்சிச் செல்வம், துகளறு புகழின் செல்வம்,
பாங்குற நிலவி இந்தப் பாரத தேசம் வாழ்க !

ஏழமை யின்றிச் சாதி இனச்செருக் கின்றி, நல்ல
தோழமை கொண்டு நாடு சுதந்தரப் பொலிவு பொங்கச்,
சூழலுக் கேற்ற கல்வி தொழில்வளந் துலங்க, நீடு
வாழுவோம் உலக மெல்லாம் ஒருகுல மாக வாழ !

கடலுண்ட மேகம் போலக் கருணையே புரிந்து, நெஞ்சில்
இடமகல் உலக நன்மை துடித்திட, இயற்கை போலக்
கடமையைக் காத்து வீரக் காதலுங் கற்புங் காத்து
நடையுயர் தேவ ராக நாடெலாம் கூடி வாழ்க !

வானுறு சுடரும் உண்டு மாமழை வெள்ள முண்டு
தேனுறு வளமை யுண்டு சிவனிற் சிவமும் உண்டு
ஊனுறு வாழ்வில் யோக ஒளியுடன் சக்தி யுண்டு
மானுடர் அமரராக வாழ்ந்திடத் தடையும் உண்டோ ?

தமிழ் வாழ்த்து

நீரினை வென்று வெய்ய நெருப்பினை வென்று, மாற்றார்
போரினை வென்று நல்ல புகழினைப் பொலிய வென்று,
காரினை வென்ற தூய கருணையங் கொடியை நாட்டிப்
பாரினை வென்ற தெய்வப் பைந்தமிழ் வாழ்க மாதோ ! 985

சாதியும் வகுப்பு வாதச் சண்டையும் சழக்கு மின்றி
ஆதிசுத் தான்ம நேய ஒருமையில் அன்பு கூடி
மேதினி வாழச் செய்யும் வித்தகத் தமிழ ணங்கின்
சோதிமெய் யறிவைப் போற்றிச் சுதந்தரத் தொண்ட ராவோம்.

அந்தநாள் கீரர் தேவர் அப்பர் சம்பந்தர் போலே
மந்திரப் பாட்டொ லிப்போம் ; மாகவி கம்பன் போலே
சுந்தரக் கலைவ ளர்ப்போம் ; சோழபாண் டியர்கள் போலே
செந்தமிழ் வீரத் திற்குச் செயமுடி கவிப்போம் வாரீர் !

களங்கமில் லாத தூய கருத்துடன் செயலும் போற்றி,
உளங்கொண்ட வீறு போற்றி, உயிரென உண்மை போற்றி
வளங்கண்ட தொழிலைப் போற்றி வரங்கண்ட கலையைப் போற்றி
இளங்கதிர் வீசி எந்தாய் இசைமொழி வாழ்க மாதோ !

தமிழ்தமிழ் என்ற போதே தண்ணமு தூறும் வாயில்.
தமிழரை நினைத்த போதே தண்ணருள் பாயும் நெஞ்சில்.
தமிழகங் கண்ட போதே சாந்தமுண் டாகும் வாழ்வில்
தமிழர சுற்ற போதே சமரஸந் தழைப்ப தாமே....

அன்பிலே, அன்பைக் காக்கும் அருளிலே, அரியமக்கட்
பண்பிலே பயன்மிகுந்த பணியிலே, கூடி வாழு
நண்பிலே தூய நல்ல நடையிலே படைசேர் வீரத்
திண்பிலே பெருகித் தெய்வத் திருவிலே நாடு வாழ்க !

காலையிற் கமலம் போலக் கனிமுகப் பொலிவு காட்டிச்
சேலையிற் பாவும் ஊடும் செறிந்தது போலக் கூடி
மாலையின் மணிகள் போல் மனமொன்றி இனமும் ஒன்றி
வேலையிற் படகு போலே மேவுக உலக வாழ்வே !

பண்ணுடன் பரதம் போலே பரிதியும் உலகும் போலே,
கண்ணனும் கீதை கேட்ட விசயனும் வில்லும் போலே,
எண்ணமும் செயலும் ஒன்றி இதயமும் அறிவும் ஒன்றிப்
புண்ணியப் பொதுநலங்கள் புரிந்துல கறிந்து வாழ்வோம்.

அந்தண்மை தன்னில் ஊன்றி, அருட்பணி கிளைத்து, தெய்வச்
சிந்தனை மலர்ந்து, ஞானத் திங்கனி குலுங்கி, நாளும்
எந்தைநா டின்பச் சோலை எனவளர்ந் தமரத் தேனைத்
தந்துபே ரின்ப வானத் தருவென வாழ்க மாதோ !

# 24. தியானம்

பலபலவாம் சாத்திரங்கள் அலசிப் பார்த்தும்
பலசாதி மதங்களையும் பழுது பார்த்தும்,
புலவர் செயும் வாய்வாதப் போர்கள் பார்த்தும்,
புவியாள்வார் சூழ்ச்சிகளைப் புகுந்து பார்த்தும்,
கலகமிலாச் சாந்தமதைக் காண லாமோ ?
கண்ணின்றிக் கண்ணுடி முகங்காட் டும்மோ ?
இல்குபரம் பொருளேநின் இச்சை யின்றி
இரவகலும் பகலவனும் எழுவ துண்டோ ?

உருவாகி உலகாகி உள்ள மாகி
உள்ளத்தே உணர்வாகி, உணர்வி னுேங்கும்
அருவாகி, அவனவளும் அதுவு மாகி,
அம்மையப்ப ஞகிநல் லன்பா லெய்தும்
குருவாகிப் பலகோடிக் குணங்க ளாகிக்
குணதொந்த மில்லாத கொள்கை யாகிக்
கருவாகிச் சின்மயமாம் காட்சி யாகும்
கடவுளே நீயல்லாற் கதியும் உண்டோ ?

அன்பென்னும் உள்ளத்தில் அடங்கி நின்ருய்
அகிலாண்ட கோடிகளை யாண்டு நின்ருய்
துன்பென்ற புயலினிலே துடிக்குந் தோணி
துறைசேர மெய்ஞானத் துணையாய் நின்ருய்
பொன்பரவும் அருணப்புன் னகையால் என்னைப்
புதுமலர்ச்சி பெறச் செய்த புனிதா னந்தா
உன்பரமென் றெனை யீந்தேன் உடலுன் கோயில் ;
உள்ளத்தே உன்னருளை நினைக்கின் றேனே.

ஒன்றே விரிவான் ஒளிர்செங் கதிரோன்
ஒன்றே உயிரும் உலகா லயமும்
ஒன்றே கடவுள் ஒருதூ யநெறி
நின்றே யறிவாய் நிலைநன் மனமே.

சாதிச் சுழலும் சமயச் சுழலும்
வேதச் சுமையும் விரிசொற் சமரும்
ஓதத் தகுமோ ? உளமொன்றி விடின்
ஆதிப் பொருளே அதுநீ எனுமே.

எல்லா மவனே எனதொன் றுமிலை ;
நல்லா னவனே நலியா ஒருவன்
வல்லா னவனே வழியும் அவனே
சொல்லால் அவனைத் துதிநன் மனமே

அலையொன் றிலைசூழ் கடலொன் றிலையேல் ;
கலையில்லை கவிக் கனவொன் றிலையேல்.
தலையில் லையெனிற் சடலம் இலையே
இலையீ சனெனில் இலையிவ் வுலகே. 1000

கண்ணின் மணிநீ கதிர்நீ மதிநீ
விண்ணிற் பலகோடி வியன் களுநீ
மண்ணிற் பயிருஞ் உயிரின் வகைநீ
எண்ணின் ஒருநீ இதயப் பொருளே.

தூய்யனே எனதானந்தத் துணையே துரியனே பரஞ் சோதிச் சுடரே
ஐயனே அடியார்குறை தீர்க்கும் அப்பனே உன தன்பெனக் கீவாய் !
பொய் பொருமைகள் புண்படுத் தாத புனிதமான புதுநல வாழ்வும்
வெய்ய பாச வினையறு வீறும் விமலனே எனக் கருள்புரி வாயே !

உள்ள மாகிய ஓம்பர மத்மா உருகி யுன்னை யுபாசித்து நின்றேன்.
கள்ள மாயக் கவலைக ளின்றிக் கட்டி லாத விடுதலை கண்டுன்
வெள்ள மான கருணையில் ஆடி விண்ணமு தென வுன்னரு ளுண்டு
தெள்ளுட லுந் திகழ்மணி யாகும் தெய்வ மாறுத லீந்தருள் வாயே.

வான் வளைத்திடும் வட்ட வுலகே வன்ன நன்மணி மந்திர மாக
ஊன் வளைத்த உயிர்த்தொகை நீயாய் உன்னன்பால் உனைப் பூசனை
செய்வேன்.
தேன் விளைத்த திருவருள் வாக்கும் தியானமும் பர மோனமு மீவாய்
யான் களித்திட என்னுள மாடும் இறைவனே அரு ளின்பமெய் யரசே!

உலப்பி லாத உலகங்கள் ஆக்கி உருவி லாமல் உலாவி யருளி
சலிப்பி லாது தொழில்களைச் செய்தும் சார்பி லாத தனித்த முதல்வா
ஒலிப்பி லாதுறை யுட்கடல் போலே உள்ள டங்கி ஒருமை யுடனே
கலப்பி லாதுனைக் காதல் செய் கின்றேன் கலந்தென்
னுருயிர்க் காதல னுவாய் ! 1005

முத்தலைக்கடல் உன்முர செனபேன் முழுமதி மலர் உன்முக மென்பேன்
ஒத்த மீன்கள் உலாவும் ஒழுங்கை உனது சக்தி யுலாவெனக் காண்பேன்.
சித்த வீணையின் சிற்பர நாதம் தியான மந்திர மென்று செபிப்பேன்
பித்த னாகி யுனைப்பிரி யாத பிள்ளை யேனைப் பிரிவற நிற்பாய்.

ஆசை யாணவ மோகங்க ளின்றி அச்ச மின்றி யகப்பகை யின்றி
மாசி லாத மனத்திரு யாழுன் மாம றைகளை மீட்டிட வேண்டும்
வாசியை மதி வட்டத்தில் வைத்து மலர்ந்த குண்டலி யமுதினை உண்டு
பேசிலாத பெருஞ்சுக மெய்தும் பிறப் புரிமை பெறுந்திற லீவாய்.

கனலும் வானமுன் காதற் கடிதம் காற்றுனது கனிதமிழ்ப் பேச்சு
அனலுன் சக்திஎன் ஆர்வமே தூபம் அழகிய வுல கானந்த வீடு.
மனதுன் மங்கலக் காதலியாமே மன்ன வாசுப மங்கள நாதா
உனது மெய்ச்சிவ போக மருளாய் உண்மை யின்பறி வான ஒருவா !

எட்டி நிற்ப துனக்கழ கில்லை ஏழையேன் பிழை ஏது மிருந்தால்
குட்டிச் சொல்லித் திருத்தியுன் னன்பிற் கூட்டிடற் குரியாய் குணக்
குன்றே
கட்டி மாம்பழக் கனிரச முடனே கலந்த தேனெனக் கலந்தென துள்ளே
தட்டி லாத சிவானந்த மாகத் தழைக்க வேண்டும் தயாபர நாதா !

ஆங்கார மற்றவர் அகத்தொளிரு ஞானமாய்,
ஆனந்த வான மாகி,
ஐம்பூத நிலையமாய், அகரத்தின் சிகரமாய்,
ஆருயிர்க் குயிர் நாதமாய்,
நீங்காத சகசசன் மார்க்கத்தின் சோதியாய்
நித்தியச் சுகராசியாய்,
நிலையாத மனதினை நிலைநிற்க நாட்டிடும்
நிகரற்ற ஜப நிட்டையாய்
ஏங்காத நெஞ்சிலே தூங்காத சாட்சியாய்
இருந்தபடி நிற்கும் அதுவாய்,
ஏகரசமாய், ஆத்ம போகரசமாய் ஒங்கும்
எல்லை யில்லா இன்பமாய்,
ஓங்கார மாகி யொளியாய் உயிர்க் குயிராக
உலவிடும் உயர் பரமனே !
ஒன்றென்று நன்றென்றும் என்றென்றும் உன்னையே
உள்ளொன்றி நிற்க வருளே ! 1010

அன்பான நெஞ்சிலே அருளான சாட்சியாய்
ஆனந்த நடன மிடுவாய்
அரகர சிவாயநம எனும் அடியர் வாக்கில், இசை
அருவியென வே பெருகுவாய்,
உன்பாத மலரன்றி வேறென்றும் அறிகிலேன் ;
ஒருமையுடன் உன் பெருமையை
உயர்வான தமிழ்பாடி உலகெலாம் புகழவே
ஓதநான் காதல் கொண்டேன்.

என்பால் இரங்கியருள் இரவுபகல் இல்லாமல்,
இதயகுகை ஒளிர் இரவியே
எண்ணியதை "இந்தா" எனத்தருந் தந்தையே,
எனையூட்டி வளர் அன்னையே,
இன்பான சோதியே, ஏகாந்த மோனத்தில்
இனிதுவரும் அனு பூதியே,
இதந்தரு சுதந்தர பதந்தரு திகம்பர
சிதம்பர பரம் பிரமமே....

ஆதி வேதஞ்சொலும் அத்யாத்ம திரமும்,
ஆனந்த வாழ்வும் வேண்டும்.
அரியசங் கரர்சொலுந் தன்னறிவு மிகவேண்டும்.
அப்பர்சொலும் அன்பு வேண்டும்.
கீதைசொலு நிஷ்காம்ய கர்மயோ கம்வேண்டும்.
கிறிஸ்துவின் பொறுமை வேண்டும்.
கிருஷ்ணசை தன்யரின் பக்திபர வசம்வேண்டும்.
கேடிலா உறுதி வேண்டும்.
பேதமறு வள்ளலின் பெரியசம ரஸம் வேண்டும்.
பேய்மனம் அடங்க வேண்டும்.
பிரியாத சிவசக்தி போலாண்மை பெண்மையுடன்
பேரின்ப முண்ண வேண்டும்.
சாதனம தாஞ்சரியை கிரியை யோகம் ஞான
சன்மார்க்க சித்தி வேண்டும்.
தன்மயச் சின்மயப் பன்மயத் தெய்வமே,
சச்சிதா னந்த பரமே!

எளியவர்கள் வயிருர உண்ண வேண்டும்; செல்வர்
இறுமாப்பு நீங்க வேண்டும்.
இடரான சாதிமத பேதவினை யறல் வேண்டும்;
எல்லாரும் ஒருகு லம்போல்
வலியவர்கள் கொடுமையற வாழவேண்டும்; பொய்
வழக்கினை ஒழிக்க வேண்டும்.
வறுமையிருள் அடிமையெனும் வார்த்தையே யில்லாது
வையஞ் செழிக்க வேண்டும்.
மெலியவரு பிணிதுயர் பொருமைவஞ் சத்திமை
வேரோடு மாய வேண்டும்.
வீரமிகு கனல் வேண்டும், விடுதலைத் திறன் வேண்டும்
வினைவேள்வி வெல்ல வேண்டும்.

நலியவரும் அசுரபலம் அழிய வேண்டும் ; இந்த
நாட்டில்விண் ணரசு வேண்டும் ;
நானிலமெ லாம்பரவி நானென் றுளத்திலே
ஞானநட மாடும் அரசே....

நல்லவர் திருக்கூட்டம் ஓங்கவேண்டும் ; உலகில்
ஞானவொளி வீச வேண்டும் ;
நாடெலாங் கல்விகலை செல்வத் தொழில் வளமை
நாடோறும் ஓங்க வேண்டும் ;
பொல்லாத கோள்பொய் பொறுமைநோ யுடன்மதப்
போராட்டம் ஒழிய வேண்டும் ;
பூமியை இரத்தகளம் ஆக்கிடும் அரக்கர்குலம்
பூண்டோடு மாள வேண்டும் ;
எல்லாரும் சரிநிகர் சமானசன் மார்க்கராய்
இன்புற்று வாழ வேண்டும் ;
இன்சொல்லும் ஈகையும் இரக்கமுந் தூய்மையுடன்
இகவாழ்வில் ஓங்க வேண்டும் ;
வெல்லவேண்டும் வாய்மை ; வீரவிடு தலைவேண்டும் ;
விஞ்ஞானம் ஓங்க வேண்டும் ;
வேதாந்த முத்தியும் சித்தாந்த சத்தியும்
விரவவரு பரம சிவமே....

போற்றி சுத்த சக்தி மயம்
போற்றி சுத்த யோக நிலை
போற்றி சுத்த சங்க நலம்
போற்றி சுத்த சன்மார்க்கம்
காற்றிற் கலந்த பூமணம் போல்
கருத்திற் கலந்து கலந் தின்ப
ஊற்றெ ழுந்து செழிக்க வுயிர்
உள்ளன் பென்றும் வாழியவே !

வாழ்க வாழ்க அருட் செல்வம்
வாழ்க செல்வத் தொழில் வளமை
வீழ்க வறுமை அச்ச மிருள்
விளைக உண்மை அறிவின்பம்
தாழ்க தீய போர் வெறிகள்
சக்தி வளரும் சாந்த நிலை
சூழ்க ! திருக்கள் மிகப் பொலிய
சுத்த சங்கம் வாழியவே. 1016

சுத்தானந்தபாரதி.

## யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின்
### அரிய புதிய நூல்கள்

| | | ரூ—அ |
|---|---|---|
| 1. | பாரத சக்தி மகா காவியம் (ஐந்து காண்டங்களும்)<br>இந்நூல் உலகப் பெரியார் வரலாறுகள், எல்லாச் சமய-சன்மார்க்க யோக மார்க்கங்களின் சாதனை முறைகள், சுத்தயோக ரகசியங்கள், கலை, பொருளாதாரம், சமயம், அரசியல், தொழில் முதலிய எல்லாத் துறைகளிலும் மனிதன் பூரணம் பெற்று அதிமனிதனாக வாழும் வழிகள் அடங்கிய புதிய காவியச் சோலை. | 15—0 |
| 2. | யோக சித்தி (மூலமும் உரையும்)<br>ஆசிரியர்-கல்வி, சுகாதாரம், அரசியல், சமுதாய சீர்திருத்தம், கிராம சேவை, பத்திரிகை, காவியம், யோகம் முதலிய பல துறைகளில் வாழ்ந்து பெற்ற அனுபவங்களெல்லாம் இந்நூலில் அடங்கியுள்ளன. | 3—0 |
| 3. | அருட் செல்வம் (நம் வேதம்) | 2—0 |
| 4. | திருநூல் (தூய வாழ்வு) | 1–12 |
| 5. | திருக்குறளின்பம் | 3—8 |
| 6. | கவிக்கனவுகள் (அரிய கலைச்சித்திரங்கள்) | 1—8 |
| 7. | புதுயுகப்பாட்டு (105) | 1—8 |
| 8. | கீர்த்தனாஞ்ஜலி (550 இன்னிசைப் பாடல்கள்) | 3—8 |
| 9. | **The Gospel of Perfect Life** | 3—0 |
| 10. | **Yogi Shuddhananda** | 3—0 |
| 11. | ஆத்மசோதனை (சுத்தானந்தரின் அனுபவ விளக்கம். அரிய பெரிய கருத்துக்கள் அடங்கிய வாழ்க்கைச் சித்திரம்.) (அச்சில்) | 5—0 |

கிடைக்குமிடங்கள்

புதுயுக நிலையம், புதுச்சேரி.

பாரதி மில்ஸ் - முதலியார்பேட்டை, புதுச்சேரி.

சுத்தானந்த சமாஜம், சிவகங்கை.

ஹிகின் போதம்ஸ் புத்தக நிலையங்கள்.

சுத்தசங்கம், வான்கார்ட் பில்டிங்ஸ்,
2-வது பீச்லைன், சென்னை.